

குரவை ஆய்ச்சியரோடு கோத்ததும்
குன்றமொன்று ஏந்தியதும்

உரவு நீர்ப்பொய்கை நாகம் காய்ந்ததும் உட்பட மற்றும்பல

அரவில் பள்ளிபிரான் தன்மாயவினைகளையே அலற்றி

இரவு நன்பகலும் தவிர்கிலம் என்னகுறை நமக்கே!

[கோபியர்களோடு ராசக்கிரீடை புரிந்தும், கோவர்த்தனம் எனும் மலையை தன் சுண்டுவிரலால் குன்றாக எடுத்தும், புரண்டோடும் யமுனைநதியில் காளிங்கன் எனும் நச்சுப்பாம்பினை அழித்தும் ஆக, பாம்பணை மேல் பள்ளிகொண்ட கண்ணபிரான் செய்திட்ட ஆச்சர்யமான திருவிளையாடல்களை இரவும் பகலும் வாயார பேசிப்புகழும் இந்த வாய்ப்பினை பெற்றுள்ள நமக்கு இம்மண்ணில் இனியேது குறை!]

–திருவாய்மொழி- 6-4-1

# ஸப்தகிரி

## ஆகஸ்ட் - 1996


தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-
மலர் 27 இதழ் 3



சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


உள்ளுறை பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ சுந்தரராஜப்பெருமாள் - கள்ளழகர் கோயில், மதுரை மாவட்டம்.

முதல் உள்ளட்டை : ஸ்ரீவேணுகோபாலசுவாமி மற்றும் திருக்குளம் காருவேட்டிநகரம் - ஆ.பி.

2-வது உள்ளட்டை. : ஸ்ரீ ஹயக்ரீவர.

பின்னட்டை : ஸ்ரீ சோமேஸ்வர ஆலயம் - கோட்டிபல்லி (ஆ.பி.)

JAGADISH

# உங்களுடன்....

உலக சமயங்கள யாவும் தங்களுக்குக்கென்று ஒரு கடவுள், ஒரு சமய நூல் என்று கொண்டு விளங்கும்போது, இந்து சமயத்தில் மட்டும் கணக்கற்ற கடவுளர்களும், அக்கடவுளர்களைப் போற்றிடும் கணக்கற்ற சமய நூல்களும் கொண்டு திகழ்கின்றது. இவ்வேற்றுமை இந்து சமயத்தின் பெருமை பேசுமா? அல்லது அதன் பலவீனத்தைக் குறிக்குமா? ஏதோ ஒரு காரணத்தினால்தான் நம் ஆன்றோர் அன்று எண்ணற்ற கடவுளர்களை வழிபடவும், கணக்கற்ற சமய நூல்களை அறிந்திடவும் வழிவகுத்தனர். ஆனால், அவையாவும், நமது பலவீனத்தின் எதிரொலியோ என்று ஐயுறும் அளவிற்குத் தற்போது இந்துவின் வாழ்க்கைப் போக்கு அமைந்துள்ளது. உலக சமயங்களைப் பொதுவாகப் பார்த்திடும்போது இந்த நேரத்தில், இந்த இடத்தில், இந்த வகையில் இறைவனை வழிபட வேண்டும் என்ற ஒரு நியதி - ஒரு கட்டுப்பாடு வரையறுக்கப்பட்டுள்ளதைக் காணலாம். பொதுவாக மற்றைய சமயத்தாரது வழிபாட்டுத்தலங்கள் ஊருக்குள் ஒன்றிரண்டு என்று விரல்விட்டு எண்ணும் அளவுக்கு, அச்சமயங்களைப் பின்பற்றும் நாடுகளில்கூட அமைந்திருக்கும்போது, இந்து சமயத்தாரிடையே மட்டும் ஆறு, மலை, மரம் என்று அங்கிங்கெனாதபடி எங்கும் பரவி உள்ளது ஏன் என்று சற்றே சிந்தித்தல் வேண்டும். இவையாவும் இந்து சமயத்தைப் பரப்புவதற்கேயாம் என்று கூறினால் அது நம்மைநாமே ஏமாற்றிக்கொள்ளும் ஒரு சிந்தனையாகத்தான் அமையும். உலகத்தில் எந்தச் சமயமும் ஒருவனின் ஒருவேளை பசியைக்கூடத் தீர்த்திடாது. வாழ்க்கையைச் சுகபோகத்தில் மிதக்கவிடாது. ஆனால் பசியைத் தீர்த்துக் கொள்ளவும், வாழ்க்கையை வளமாக அமைத்துக்கொள்ளவும் வழி வகுக்கும். அந்த வகையில் இந்து சமயம் தனக்கென்று ஒரு தனியிடத்தை - ஏன் முதலிடத்தையே வகித்து வருகின்றது. ஏனென்றால், இந்து சமயத்தின் பெருமையே அது கொண்டுவிளங்கும் பல கடவுளர் வழிபாடும், பல சமயநூல்களின் போதனைகளுமேயாம். இந்து சமயம் உடலை வருத்தியோ, உள்ளத்தை அச்சுறுத்தியோ கடவுள் நம்பிக்கையை வளர்த்திடவில்லை. 'வாழு, வாழவிடு' என்பதற்கு மாறான 'வாழவிடு, வாழ்வாய்' என்பதுதான் அதன் தாரக மந்திரம். நம்மை அடுத்து இருப்பவனின் வயிறு நிரம்பி இருந்தால்தான், நம் கையில் இருக்கும் ஒரு கவளச்சோறு நம் வயிற்றில் செல்வது உறுதியாகும். இல்லாதவன் சிரிப்பில் இறைவனை காண்போமோ என்னவோ, அவனுடைய சிரிப்பில் நம் அழுகையை நாம் தவிர்த்திடலாம். அடுத்தவன் மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமென்றால், நாம் ஒரு நல்ல மனிதனாக இருத்தல் அவசியம். ஆம், மனிதன் மனிதனாக எப்படி வாழவேண்டும் என்பது அறிவுறுத்துவதே இந்து சமயத்தின் அடிப்படைத் தத்துவமாகும். அத்தத்துவத்தின் ஆற்றலை விளக்கத்தான், உணர வைக்கத்தான் இந்து சமயம் பல கடவுளர் வழிபாட்டினையும், பல சமய நூல் படைப்புகளையும் கொண்டு விளங்குகிறது.

அத்தகு பெருமைமிகு இந்து சமயங்களில் வைணவ சமயமானது இறைவனை மனிதனிடம் அழைத்துச் செல்லும், அதன்முகத்தான் மனிதனை உயர்த்திட வைக்கும் பேரியக்கமாகத் தொன்றுதொட்டு விளங்கிவருகின்றது. அவ்வைணவம் போற்றும் மாயவன், தான்படைத்திட்ட மனிதன் உள்ளத்தாலும், உடலாலும் மகிழ்ச்சியுடனும், நலத்துடனும் உயர்ந்து விளங்கிட அவனுக்கு வழிகாட்டிடும் வகையில் அவன் நிலைக்குத் தான் இரங்கி வந்து பல அவதாரங்களை இப்புவிமீது கொண்டிட்டான். அந்த அற்புதத் தசாவதாரங்களில் முழு அவதாரமான துவாபரயுகத்து கிருஷ்ணவதாரம் சிறியோர் முதல் முதியோர் பலரும் அறிந்து தெளிவுறும் வகையில் பல செய்திகளைத் தந்திட்டது. 'இராமனது மெய்யும், கண்ணனது பொய்யும் நமக்குத் தஞ்சம்' எனும் வழக்குமொழியால் நாம் அறியும் வாழ்க்கை உண்மைகள் பலப்பல. 'கண்ணனது பொய்' எனும் கூற்றுக்குப் பின்னால் நடந்திட 'பாகவதத் திருவிளையாடல்களும்' 'பாரத நிகழ்ச்சிகளும்' கலியுகமாந்தர்களுக்கு வழங்கிட்ட 'நம்பிக்கைக் கருத்துகளாம்'. இராமன் ஓர் 'ஆசிரியன்' எனும் நிலையில் இருந்து காட்டிட்ட வாழ்க்கை இலக்கணத்திற்குக் கண்ணன் நம்முடன் 'ஒரு நண்பன்' நிலையில் இருந்து ஒன்றாகக் கலந்து, பழகி உணர்த்திட்ட செய்திகள் வாழ்க்கை இலக்கியமாகத் திகழ்கின்றன. மகாபாரதம் எனும் வாழ்க்கைப் போர்க்களத்தில் கண்ணன் ஒரு கர்மவீரனாக விளங்கி, நல்லோர் உறவின் பயனை, தீயோன் நட்பின் ஆபத்தை ஒரு தனி மனித நிலையிலும், ஒரு சமுதாயத்தின் நோக்கிலும் கண்டு அறிவுறுத்தினான். இன்றையக் காலக்கட்டத்தில் கட்டாயமாக நாம் அனுசரிக்கவேண்டிய இறை நம்பிக்கை, அதனால் கிடைத்திடக்கூடிய ஒற்றுமை, தியாகம், மன உறுதி, பொறுமை, சத்திய உணர்வு ஆகிய உயர்பண்புகளின் ஆற்றலை, பெருமையைக் கண்ணபெருமானின் வாழ்க்கை சரிதம், அதுகொண்டு விளங்கும் கதை நிகழ்ச்சிகள், கதை மாந்தர்கள் நமக்கு நேரிடையாகவும், மறைமுகமாகவும் எடுத்துக்காட்டியுள்ளன. வாழ்க்கை எனும் பாதையில் வஞ்சம், சூது, ஏமாற்றம், கோபம், கொலை, கொள்ளை, பேராசை எனும் கருவேலமுட்கள் ஏராளமாகப் புதைந்து கிடக்கலாம். ஆனால் அவற்றை மனிதன் தன் அறிவால், ஆற்றலால், தியாகத்தால், கடமை உணர்வால், நேர்மையால் சான்றோர் துணையால் பணிவால், எல்லாவற்றிற்கும் மேலாக இறைநம்பிக்கையால் எவ்வாறு எளிமையாகக் கடந்திடலாம் என்பதை ஐந்தாம் வேதமான மகாபாரதம் நமக்கு விளக்குகிறது. மாதவனின் அவதார ரகசியப் பெருமைகளைக் கூறிக்கொண்டே போகலாம். ஆனால் கற்கண்டின் சுவையை அவரவர்களே சுவைத்தாலொழிய அவ் 'இனிய இன்பத்தை' அனுபவித்திட இயலாது. ஆகவே கிருஷ்ணவதாரப் பெருமை பேசும் செய்திகளைக் கேட்டும், படித்தும், பார்த்தும் நம்மை நாம் பண்படுத்திக்கொண்டு பயனுற வாழ்வோமாக!



# செய்திச் சுருக்கம்

## ஸாக்ஷாத்கார வைபவம்

திருப்பதி அடுத்துள்ள ஸ்ரீநிவாச மங்காபுரத்திலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் 19-7-96 முதல் மூன்று நாட்களுக்கு 'ஸ்ரீஸாக்ஷாத்கார வைபவம்' எனும் கோயில் நிகழ்ச்சி வெகுச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

* * *

## ஆனிவார ஆஸ்தானம்

திருமலைக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் 'ஆனிவார ஆஸ்தானம்' எனும் திருநாளன்று தேவஸ்தானத்தின் வரவு செலவு கணக்குகள் கோயில் உதஸவர்முன் வாசிக்கப்படும். அந்த வகையில் இவ்வாண்டு ஆனிவார ஆஸ்தானம் 16-7-96 அன்று இந் நிகழ்ச்சி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை உத்ஸவ மூர்த்தியான ஸ்ரீமலையப்ப சுவாமி இவ்வருடம் புதியதாக செய்யப்பட்ட வைர கிரீடத்துடன் அலங்கரிக்கப்பட்டு, தன் துணைப்பெண் தெய்வங்களுடன் ஆஸ்தானத்திற்கு எழுந்தருளினார். பிறகு அவர் முன், இவ்வாண்டு கோவிலின் வரவு, செலவு கணக்குகள் பட்டியல்போட்டுப் படிக்கப்பட்டன. அன்று மாலை சுமார் 2000 கி.கி. எடை கொண்ட பலவண்ண மலர்களுடன் திருத்தேர்வடிவத்தில் உருவாக்கப்பட்ட புஷ்ப பல்லக்கில் உத்ஸவர் எழுந்தருளி, திருமலை நான்கு மாடவீதிகளில் திருவீதிவலம் வந்து, கூடியிருந்த பக்தர்களுக்குத் திருவருள் பாலித்தார்.

* * *

## பஜனை மேளா

தி.தி. தேவஸ்தானத்தாரின் தர்ம பிரசார பரிஷத் சார்பில் சென்ற மாதம் 20, 21 தேதிகளில் ஆந்திர மாநிலம் விஜயவாடாவில் சுமார் 107 பஜனைக் குழுக்களின் 'கூட்டு பஜனை நிகழ்ச்சி' நடைபெற்றது. இதுபோது 1350 பக்தர்கள் கலந்து கொண்ட 'பஜனைப் போட்டி' ஒன்றும் நடைபெற்றது. மேற்குறிப்பிட்ட பஜனைக் குழுக்கள் நகரின் முக்கிய வீதிகளில் பஜனை ஊர்வலம் ஒன்றினை மேற்கொண்டு, துர்க்கையம்மன் கோயிலில் ஒன்றுகூடி பலவேறு சுவையான பஜனை நிகழ்ச்சிகளை நிகழ்த்தினர். காகதீய சிமெண்ட் நிறுவனத்தின் நிருவாக இயக்குநரும், முன்னாள் தி.தி. தேவஸ்தானத்தின் பொறுப்பாண்மைக்குழுத் தலைவருமான திரு. வேங்கடேஸ்வரலு அவர்களால் பஜனைக்குழு பக்தர்களுக்கு இலவச உணவு வழங்கப்பட்டது.

* * *

## தியாகராஜ ஆராதனை

திருப்பதி ஸ்ரீதியாகராஜர் அறக்குழுவின் சார்பில், திருப்பதி ஸ்ரீதியாகராஜ மண்டபத்தில் 54ஆவது ஸ்ரீதியாகராஜ ஆராதனைவிழா 27-7-96 முதல 5-8-96 வரை வெகுச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவ் ஆராதனை விழா பிரபல கர்நாடக இசை அறிஞர் திரு. ஸ்ரீசெம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயரால் 27-9-96 அன்று மாலை துவக்கி வைக்கப்பட, தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார். இதுபோது, இவ் அறக்குழுவினரின் கட்டிட நிதிக்காக தி.தி. தேவஸ்தானம் சார்பில் ரூ. 4 இலட்சத்தினை செயலாட்சித் தலைவர் அவர்கள் வழங்கினார். மேலும் பலகாலமாக நடந்து வரும் இவ் ஆராதனை விழாவிற்குப் பலவேறு நிலைகளில் ஆக்கமும் ஊக்கமும் தந்துவரும் சென்னை பிரபல தொழிலதிபர் திரு. டி.டி. வாசு மற்றும் உள்ளூர் சட்டமன்ற உறுப்பினர் திரு. எம். மோகன் ஆகியோர் பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டனர். இப்பத்து நாட்களின் போது இசை விற்பன்னர்களின் கர்நாடக வாய்ப்பாட்டு, இன்னிசைக் கருவி இசை நிகழ்ச்சிகள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. விழாவின் இறுதிநாளான 5-8-96 அன்று நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு இந்தியத் தேர்தல் ஆணையர் திரு. டி.என். சேஷன் அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றுப் பேசினார். தொடர்ந்து பிரபல நாட்டியக் கலைஞர் திருமதி. சுதாராணி ரகுபதி அவர்களுக்கு, ஸ்ரீதியாகராஜ ஆராதனைக்குழு சார்பில 'பைதகிரி சங்கீத வித்வன்மணி' எனும் பட்டம் அளித்து கௌரவித்தார். இந்நிகழ்ச்சியில தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் மற்றும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணை வேந்தர் ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர்.

* * *

### நன்கொடை

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்கிடும் வகையில் தங்கு மற்றும் பொதுவசதி கொட்டகைகள் கட்டுவதற்கென புதுதில்லியைச் சார்ந்த பிரபல தொழிலதிபர் திரு. அபய் ஆஸ்வால் அவர்கள் ரூ. 31 இலட்சம் நன்கொடையாக தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கினார்.

* * *

சென்னையைச் சார்ந்த திரு. ஆர். வீரமணி அவர்கள் தி.தி. தேவஸ்தானத்தாரின் அன்னதான திட்டத்திற்கென ரூ. 5 இலட்சம் நன்கொடையாக அண்மையில் வழங்கினார்.

* * *

### திருமலைக்கு

பாரதிய ஜனதா கட்சித் தலைவர் திரு. எல்.கே. அத்வானி அவர்கள் மாநில மற்றும் உள்ளூர் கட்சித் தலைவர்கள் திரு. வெங்கய்யா நாயுடு திருமதி. சாந்தாரெட்டி ஆகியோருடன் திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் திரு. அத்வானி அவர்கள் தி. தி. தேவஸ்தான திருமலை இணைச்செயலாட்சித் தலைவர் அவர்களால் எதிர்கொண்டு வரவேற்கப்பட்டார்.

* * *

### புதிய மேலாளர்

ஆந்திரமாநில அச்சுத்துறையின் உதவி இயக்குநர் திரு. எம். லக்ஷ்மண் ராவ் அவர்கள் 1-8-96 அன்று தி.தி. தேவஸ்தான அச்சகத்தின் புதிய மேலாளராக நியமிக்கப்பட்டார்.

* * *

### பட்ஜெட்

தி.தி. தேவஸ்தானத்தாரின் தரம பிரசார பரிஷத் ஆதரவில் இந்து சமயக் கொள்கையினைப் பரப்பிடும் வகையில் நாட்டின் பலவேறு இடங்களில், பல்வேறு நாட்களில் சமய நிகழ்ச்சிகள் நடைபெற்று வருவது யாவரும் அறிந்ததே. இந்நிகழ்ச்சிகளுக்கென 1996-97 ஆண்டுக்கென ரூ. 2,30,000 ஒதுக்கப்பட்டுள்ளது. இத்தொகையில், தென்னகத்தைச் சார்ந்த வயது முதிர்ந்த வேத பாராயணதார்களுக்கு ஓய்வூதியமாக அளிக்கப்படும் ரூ. 60 இலட்சமும் அடங்கும்.

* * *

## அறிவிப்பு

திருமலையில் தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் நடைபெற்றுவரும் காது குத்துவோர் சங்கத்தினால் மேற்கொள்ளப்பட்டுவரும் (யாத்திரிகர்களின் வேண்டுதல் காரணமாக) குழந்தைகளுக்குக் காதுகுத்துவதற்கான கட்டணம் கீழ் வருமாறு மாற்றப்பட்டுள்ளது.

டி.பி. மண்டபத்தில் இருக்கும் சங்கத்தில்
காது குத்துவதற்கு ரூ. 10/-

யாத்திரிகர்களின் விருப்பத்திற்கிணங்க தங்கு விடுதிகளில்
காது குத்துவதற்கு ரூ. 15/-

## வாராந்திர சேவை

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் மூலவர்க்கு வெள்ளிக்கிழமை தோறும் காலை 3-30 மணி அளவில் மேல் சட்டை மற்றும் உத்தரீயம் அணிவிக்கப்படும். இவ் அலங்கார சேவையினை கிருஹஸ்தர்கள் ரூ. 12,250 செலுத்தி கண்டு களிக்கலாம். இச்சேவையின் போது கணவன், மனைவி ஆகிய இருவர் அபிஷேகத்திற்கு அனுமதிக்கப்படுவர். கிருஹஸ்தர்க்கு சேஷவஸ்த்ரம், இரண்டு லட்டுகள், இரண்டு வடைகள் பஹுமானமாக வழங்கப்படும்.

## ஸ்ரீபத்மாவதி பரிணயம்

திருப்பதியை அடுத்துள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலில் நாள்தோறும் காலை 10-30 மணி முதல் மதியம் 12-30 மணி வரை 'ஸ்ரீபத்மாவதி பரிணயம்' எனும் திருக்கல்யாண உத்ஸவம் நடைபெறும். இதில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ரூ. 500/- செலுத்த வேண்டும். இத்தொகையினை "The Executive Officer, T.T.D., Tirupati" எனும் பெயரில் எடுக்கப்பட்ட தேசிய வங்கி காசோலை மூலமாக அனுப்புதல் வேண்டும். இவ் ஆர்ஜித உத்ஸவத்தில் பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு வஸ்த்ர பஹுமானமும், சிறப்பு தரிசன வசதியும் அளிக்கபபடும். நாள் ஒன்றிற்கு குறிப்பிட்ட எண்ணிக்கை கொண்ட சீட்டுகளே இவ்வுத்ஸவத்திற்காக ஒதுக்கப்படும்.

# கேசவனின் வேய்ங்குழலோசை

திருமதி. எஸ். கமலா - சென்னை.

**ந**டுப்பகல் கழிந்த முன் மாலைப்பொழுது. கோகுலத்துக் கோபியரெல்லாம் தங்கள் பகல் நேரப்பணிகளை முடித்து ஒய்வாக இருக்கும் நேரம்.

எங்கிருந்தோ காறறில ஓர் இனிய நாதம் வந்து செவிகளில் அலைமோதத் துவங்கியது. கோபி ஒருத்தி இதனைக் கேட்டாள். திமுதிமுவென ஓடி வந்தாள். தெருவில் வந்து நின்ருள். ஊரிலிருக்கின்ற பெண்களையெல்லாம் அழைக்கின்ருள.

"இந்த நாவலநதிவில வாழும் பெண்களே! இதோ இந்த இன்னிசையைக் கேட்க வாருங்கள். பெரிய வலம்புரிச் சங்கினைத் தன் இடக்கரத்திலேந்திய மாயவன் தன் திருவாயில் வைத்து ஊதும் தீங்குழலிலிருந்து பிறந்த நாதம் இது.

இதோ இடைச் சிறுவர் அனைவரும், சிறுமியரும் தாம் தாம் செய்கின்ற தொழில் மறந்து மாதவனின் வேய்ங்குழலிசை வரும் திசை நோக்கி வந்து கயிறு மாலையாகியது போல வரிசையாகச் சூழ்ந்து நிற்கின்ற கோலத்தைக் காண வாருங்கள்."

குழலூத மாயவன் நிற்கின்ற தோற்றத்தை வருணிக்கின்ருள். இடப்பக்கம் தோளோடு சரிந்து இருகையும் குழல்மேல்கூட, புருவம் நெளிந்து மேலேற காற்றை உள்ளிழுத்து விடுவதனால் குடவயிறு சுருங்கி விரிய, உதடுகளின் கடைகூட கோவிந்தன் காற்றை ஊதுகின்ருன்.

ஆனால் அந்தக் குழல்நாதம் செய்யும் ஜாலங்கள் தாம் எத்தனை?

உலகையும் உயிரினங்களையும் ஏன்? விண்ணுலகையும் அவ்வொலி மயக்கும் மாயங்களைப் பாருங்களேன்? மடமயில்களும், பெண் மான்களும் போலத் தங்கள் மலர்க்கூந்தல அவிழ்ந்து விழுவதையும், ஆடை இடுப்பிலிருந்து நெகிழுவதையும கூடக் கவனிக்காமல தன்னிலை மறந்து நழுவும துகிலைச சரிசெய்யாமல் கையில பறறி வளைந்து நின்று தம் கடைக்கண்ணுல் நாதம பெருகிவரும் திசை நோக்கி ஓடவும் முடியாமல் நிறகின்றனர்.

வானத்தின் இளவரசனான அந்த வைகுந்தன், வஸுதேவன மைந்தன், வடமதுரைக்கு மன்னனாகப பிறந்து, நந்தகோபனின இளவரசாக வளரந்து வரும கோவலககுட்டன் தன திருவாயில் வைத்து இசை எழுப்பத் தொடஙகியதும தேவரு



லக மங்கையர் அனைவரும் வந்து, கூடி, மனம் உருக, கணகளில ஆனந்தக் கண்ணீர் பெருக, கூந்தல் அவிழ்ந்து வீழ்ந் ததும் அறியாதவராய், முன் நெற்றி வேர்க்க, குழலிசை மாந்தி, மெய்ம்மறந்து நின்ற னர்.

தேனுகன், பிரலம்பன், காளி யன் என்னும் தீய அசுரர்களை அடக்கித் தன் இளம்பருவத் திலேயே கானகத்தில் மாயங் கள் செய்து உலாவிய கருஞ் சிறுக்கனாகிய கண்ணன் தன் வேய்ங்குழலில் இசை பொழியத் தொடங்கியபோது இந்திரலோகத்து நடனமா தர்களான மேனகை, திலோத் தமை, அரம்பை, ஊர்வசி ஆகிய நால்வரும் வெட்கமுற்று மயங்கி தம் நடனத்தின் ஆட லையும் பாடலையும் மாற்றிச் செய்து குழப்பமடைந்து வாய டைத்து நின்றுவிட்டனரே!

முன் கிருதயுகத்தில் மானு டமடங்கலாகி, இரணியனை முடிக்க வந்தவன் மூவுலகின் மன்னரகளும் அஞ்சி நடுங்க, மதுசூதனன் இசைத்த குழலி சையில் நல்ல நரம்புகளால் செய்த தும்புரு வீணை இவற் றைக் கொண்டே நாரதரும் கின் னரர் என்ற தேவகணத்தவரும் தம் இசைக்கருவியை இனியாம் தொடோம் என்றே சூளுரைத் துவிட்டனர்.

குழலூதி உலகை மயக்கும் கண்ணனின் கண்கள் எப்படிப் படவை தெரியுமா?

செவ்வரியோடி, அகன்று விசாலமான கண்களுடன் திரண்ட தோள்களுடைய அவன் தேவகியின் குழந்தையாக மட் டுமா இருக்கின்றான்.

தேவரகளுக்குச் சிங்கமாகவும் விளங்கும் பரம புருஷன் ஆகவும் விளங்கும் அவன் இன்று குழலெடுத்தூத அந்தத் தேனிசை மாந்திய தேவர்களின் துன்பங்கள் தான் எத்தனை? கேளுங்கள்.

அந்தரத்தில் திரியும் கந்தர்வர் கள் அவ்வமுத இசைவலையிலே சுருக்கிடப்பட்டு "நாம் வலி மையிழந்தோம்" என்று வெள்கி, மயக்குற்று, மனம் நைந்து கைகுவித்து நின்றனர்.

அவர்களில் ஒருவன் பேசு கிறான்! 'இதோ பூவுல கில் நான் கண்ட அற்பு தம். பசுநிரை மேய்க் கும் இளைய கோவலர் கூட் டத்திடையில் அந்த யசோதை யிளஞ்சிங்கம் வேய்ங்குழலில் இசையெழுப்புகிறான். அந்த இனிய நாதம் காற்றில் மிதந்து வானுலகளவும் சென்று தேன் பாய்ச்சுகிறது. தேவர்கள் தங்களுக்குப் படைக்கப்படும் யாகத்து அவி உணவையும் ஏற்க மறந்து ஆயர்பாடி வந்து தங்கள் செவிகளில் அவியு ணவினும் தெவிட்டாச் சுவை நிறைந்த இசை சுவையை உண்டு மகிழ்ந்து, கோவிந்த னைத் தொடர்ந்து நின்றனர். குழலூதும் அந்தக் கோவலக் குட்டன் கோவிந்தனின் தோற் றம் அப்போது எப்படி சேவை தருகிறது பாருங்கள்' அந்த எட்டு வயதுப் பாலகனின் சிறு தளிர் விரல்கள் வேய்ங்குழலி சைத் தடவி ஸ்வரந்துளைகளுக் குப் பரிமாற செங்கமலத் திருவி ழிகள் ஒருபக்கமாய்ச் சேருகின் றன. குழல் வைத்த கொவ்வைச் செவ்வாய் குவித்துக் கொப்ப ளிக்கிறது. குறுவியர்வையுடன் புருவம் இரண்டும் கூடலிக்கின் றன. ஒரு காலை ஊன்றி மறு காலைப் பின்புறமாய் முன்னங் காலையூன்றி சாய்ந்து நின்று குழலிசைத்து உலகையே மயக் குகிறான். எப்படி உலகம் மயங்குகிறது பாருங்களேன்? பறவைக் கூட்டங்களான கிளி, மைனா, புறு இவைகள் தங்கள் கூடுகளைவிட்டு வந்து கண்ண னைச் சுற்றிச் சூழ்ந்து கிடக் கின்றன. பசுக்கூட்டங்களோ தங்கள் கால்களைப் பரப்பி அமர்ந்து தங்கள் காதுகளை ஆட்டவும் இயலாமல் வேய்ங் குழலின் நாதத்தில் லயிக்கின் றன.

அக் கார்மேகவண்ணனின் சுருண்ட முடிக்காற்றைச் செங்க மல மலரைச் சூழ்ந்து மொய்க் கும் வண்டுக் கூட்டம் போல் திகழ அவன் ஊதும் குழலிசை கேட்கும் மருண்ட மான் கூட் டங்கள் தம் மேய்தல் தொழிலை யும் மறந்து, மேய்ந்த புல்லும் கடைவாயில் வழிய எழுது சித் திரங்கள் போல நிற்கின்றன. இடையிலணிந்த பீதக வாடை யுடன் கருங்கண் தோகை மயிற் பீலியை முடியில் அணிந்து அம்மாயவன் ஊதும் குழ லிசை கேட்டு நிற்கும் மரங் கள் மகிழ்ச்சியால் தேன்தாரைக ளைப் பொழிந்தன. தம் கிளை களைச் சாய்த்து மலர்களை உதிர்த்தன."

இப்படிக் கோவிந்தனின் கோமளவாயில் வைத்தூதும் குழல் தொளைகளின் வழியே குமிழ்ந்துக் கொப்பளிக்கும் அமுத கீதத்தினை விஷ்ணுசித்த னின் சொற்களால் சொல்லவல் லவர் சாதுக்கள் குழுவில் ஒருவ ராகக் கொள்ளப் படுவர் என்று மஹதாஹ்வயர் என்று போற் றப்படும் பெரியாழ்வார் கோவிந் தன் குழலிசையைப் போற்று கின்றார்.



(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

## நம்மாழ்வார் விளக்கம்

விஸ்தார: ஸ்தாவரஸ்த்தாணு:
ப்ரமாணம் பீஜ மவ்யயம் ।
அர்த்தோऽநர்த்தோ மஹாகோசோ
மஹாபோகோ மஹாதந: ।। 46 ।।

427. விஸ்தார: - கலியின் கொடுமையை அழித்து, க்ருயுகம் நிறுவ, வேதநெறியைப் பரவச்செய்பவன்.

பெரிய கிதயுகம் பற்றிப், பேரின்பவெள்ளம் பெருக (5-2-3)

428. ஸ்தாவரஸ்த்தாணு: - இவ்வாறு தர்மத்தை நிலையுறச் செய்து, ஒய்வு கொள்பவன்.



தன் தெய்வநிலை உலகில் புகவைக்கும் அம்மான் (3-10-6)

429. ப்ரமாணம்: - க்ருதயுகத்தில் ஜனங்களுக்கு நல்லன தீயனவற்றை வரையறுத்துக் காட்டுவோன்.

கலியுகம் ஒன்றுமின்றிக்கே தன் அடியார்க்கு அருள் செய்யும்....கண்ணன் (5-2-11)

430. பீஜம் அவ்யயம் (அவ்யயம் பீஜம்): - இவ்வாறு தர்மத்தை நிலைக்கச் செய்வதால், இதற்கு அழியாத விதை ஆவான்.

முதல் தனி வித்தேயோ (10-10-10)

431. அர்த்த: - உத்தமமான புருஷர்க்குத் தானே புருஷார்த்தமாக விளங்குவோன்.

வைதிகரே, மெய்ப்படியால் உன் திருவடிச் சூடும் தகைமையினார் (தி.விரு. 94)

432. அநர்த்த: - இழிவான பலன்களை விரும்புவோரால் விரும்பப்படாதவன்.

மாலை நல்நாவிற் கொள்ளார், நினையார் அவன் மைப்படியே (தி.விரு. 93)

[மைபடி-கறுத்த, அழகிய திருமேனி.]

433. மஹாகோச: - அன்பர்களுக்கு எவ்வளவு வழங்கினாலும், அழியாத நவநிதிகள தன் பொக்கிஷத்தில் வாய்ந்தவன்.

வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல் மணிவண்ணன் (3-9-4)

434. மஹாபோக: - பொருள்படைத்துப் பெறும் இன்பமும் தன்னாலே என்னுமாறு விளங்குவோன். நமது இன்பத்திற்குக் காரணமானவன்.

இன்பம் பயக்க எழில் மலர் மாதரும் தானும்
இவ்வேழுலகை, இன்பம் பயக்க, இனிதுடன் வீற்றிருந்து
ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1)

435. மஹாதந: - இரப்பவர்களுக்கு உதவக்கூடிய அளவற்ற செல்வம் உடையவன்.

சிறந்த செல்வம் மல்க (6-1-3)

அநிர்விண்ண: ஸ்தவிஷ்டோபூர்
தர்மயூபோ மஹாமக: ।
நக்ஷத்ரநேமீ நக்ஷத்ரீ
க்ஷம: க்ஷாம: ஸமீஹந: ।। 47 ।।

436. அநிர்விண்ண: - உலகைக் காப்பதில் தன் முயற்சி வீணாயினும், தளராமல் மேன் மேலும் ஊக்கம் கொள்பவன்.

சென்று சென்றாகிலும் கண்டு, சன்மம்
கழிப்பான், எண்ணி ஒன்றியொன்றி உலகம்
படைத்தான் (3-9-10)

[சன்மம் கழிப்பான் - பிறவிகளை அறுப்பதற்காக, மீண்டும் மீண்டும் படைப்புத் தொழிலில் படிந்து படைத்தான்.]

## 16. சோதிமண்டலத்திற்குரியவன்

437. ஸ்தவிஷ்ட: - நக்ஷத்ர மண்டலத்தில் சிம் சுமார சுக்ரரூபியாய் விரிந்திருப்பவன்.

438. பூ: - த்ருவ நக்ஷத்ரத்தைத் தாங்குவதால் பூகோள ககோளகங்களைத் தாங்குமவன்.

439. தர்மயூப: - தர்மம் என்ற தத்துவத்தைச் சிறந்ததாகக் கொள்பவன்.

அமைவுடை அறநெறியாவையும் தானாய்
(1-3-3)

[அமைவு உடை-பலனை உடைய. அறநெறி-தர்ம மார்கம்]

440. மஹாமக: - தர்மத்திற்குச் சரீரமாகையாலே, சிறந்த கேள்விகளுக்குத் தானே அங்கமாக விளங்குவோன்.

441. நக்ஷத்ரநேமீ: - நக்ஷத்ரங்கள் என்ற ககோள சக்கரத்தை நடத்துவோன்.

விளங்கு தாரகைகள் என்கோ? (3-4-2)

442. நக்ஷத்ரீ: - சிம்சுமார வடிவமான நக்ஷத்ரத்தை தரிப்பவன்.

443. க்ஷம: - இவ்வாறே எல்லா உலகங்கள் பாரத்தையும் எளிதில் சுமப்பவன்.

புவியும் இருவிசும்பும் நின்னகத்த
(பெ.திரு. 7

444. க்ஷாம: - அவாந்தர ப்ரளயத்தில் நக்ஷத்ரங்கள் இல்லாமையால், குறைவுபட்டு பவன்.

445. ஸமீஹந: - படைப்பின்போது ய ரையும் தமது அதிகாரங்களில் ஓய்வில்லா முயலச் செய்பவன்.

திருத்தினான் தெய்வங்கள், அத்தெய்வ
நாயகன்தானே (5-2

## 17. யஜ்ஞஸ்வரூபன்

யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யச்ச
க்ரது: ஸத்ரம் ஸதாம்கதி: ।
ஸர்வதர்சீ நிவ்ருத்தாத்மா
ஸர்வஜ்ஞோ ஜ்ஞானமுத்தமம் ।। 48 ।।

446. யஜ்ஞ: - யாகஸ்வரூபியானவன், ய மயமாகவும், அது இயங்க அனுகூலமாக பயனுமாகவும் விளங்குவோன், யாகம் முதலா கர்மங்களால் பெருமானைப் பெறுவது ப்ர ருத்தி மார்க்கம் எனப்படும். இந்த மார்க்கத்தி அனுகூலமாக இருப்பவன்.

447. இஜ்ய: - செல்வம், ஸ்வர்கம் போ பலன்களை விரும்புவோர்க்கு, இந்திரன் ( லான தேவர்களின் மூலமாக வணங்கப்பெ வோன். "ஸர்வ தேவநமஸ்காரம் கேசவம் ப்
கச்சதி".

அவரவர் இறையவர் குறைவிலர், இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே, (1-1-5)

[அவரவர் வணங்கும் தெய்வங்கள் பல கொடுப்பதில் குறையுடையோர் அல்லர். இ யவர்-ஸர்வேச்வரன், இவன் இந்தத் தெய்வங் பலனைத் தருமாறு இவற்றிற்கு அந்தர்யா யாக விளங்குகிறான்.]

448. மஹேஜ்ய: - அல்பமான பயனை நா மல் செய்யும் மஹயஜ்ஞ ஸ்வரூபியானவன்

449. க்ரது: - யாகங்களால் ஆராதிக் பெறுவோன்.

விடலில் வேதவொலி முழங்குந் திருவண்-
வண்டூர் (6-1-4)

நடைப்பலி இயற்கைத் திருச்செங்குன்றூர்
(8-4-9)

[நடை-தினம் நடக்கும். பலி-திருவாராதனம். இயற்கை-இயல்பாக உள்ள.]

450. ஸத்ரம்: - பல யஜமானர்களால் நெடுங் காலம் செய்யப்படும் ஸத்ரம் என்ற யாகத்தால் ஆராதிக்கப்பெறுவோன்.

451. ஸதாம் கதி: - இந்த்ரியங்களை வென்ற சான்றோர்க்குப் புகலானவன். தமது முயற் சியில்லாமல் இவர்கள் பகவானது திருவருளை எதிர்நோக்கி வணங்குவர். இது நிவ்ருத்தி மார்கம். இந்த மார்க்கத்திற்கு இவன் அனுகூல மானவன்.

மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம்
(9-10-7)

[வேறு பயனைக் கோராமல் தன்னை வணங் குவோர்க்கு விரும்பும் பயனைக் கொடுப்பவன்.]

452. ஸர்வதர்சீ: - ப்ரவ்ருத்தி தர்மம், நிவ் ருத்தி தர்மம் இவற்றைக் கண்கூடாகக் காண வல்லவன்.

தளர்வின்றியே என்றும் எங்கும் பரந்த
தனிமுதல் ஞானமொன்ருய் (3-10-10)

## 18. நரநாராயண அவதாரம்

### 18.1 சில பண்புகள்

453. நிவ்ருத்தாத்மா: - வைராக்யத்தைப் பரப்புவதற்காக, சிற்றின்பங்களிலிருந்து மனத் தைத் திருப்பியவன்.

என்னைத், தீமனங்கெடுத்தாய் (2-7-8)

454. ஸர்வஜ்ஞ: - தான் யாவர்க்கும் அந் தர்யாமி என்பதை உணர்ந்திருப்பவன். எல்லா வகையாலும் தன்னை அறிந்தவன்.

மெய்ஞ்ஞானச் சோதிக் கண்ணன் (3-2-7)

455. ஜ்ஞாநம் உத்தமம்: - (உத்தமம் ஜ்ஞாநம்) உத்தமமான வைஷ்ணவ தர்மத்தை உணர்ந்த ஞானஸ்வரூபன்.

நிறைந்தஞான மூர்த்தியாயை (4-7-7)

ஸுவ்ரத: ஸுமுக: ஸூக்ஷ்ம:
ஸுகோஷ: ஸுகத: ஸுஹ்ருத்: ।
மநோஹரோ ஜிதக்ரோதோ
வீரபாஹுர் விதாரண: ।। 49 ।।

456. ஸுவ்ரத: - சிறந்த வ்ரதத்தை ஏற்றுக் கொண்டவன். அடியார் தர்மத்தை விடா மல் இருப்பதற்காக, தான் தர்மத்தை விடாமல் அனுஷ்டிப்பவன்.

ஆற்ற நல்ல வகைகாட்டும் அம்மானை (4.5.5)

457. ஸுமுக: - இவ்வாறு தன்கர்மங்களில் ஊன்றியிருக்கும்போது, தெளிவான திருமுக மண்டலம் உடையவன்.

காண்தகு தாமரைக் கண்ணன் (8-2-2)

[காண்தகு-கண்டு களிப்பதற்கு அழகான]

458. ஸூக்ஷ்ம: - தனக்கு எவரும் ஒப்பிலர் என் பதை நன்கு அறிந்தவன். செய்யும் வகையை நன்கு அறிந்தவன்.

கூடிநீரைக் கடைந்தவாறும் அமுதம் தேவர்
உண்ண, அசுரர்களை வீடும் வண்ணங்களே
செய்து போன வித்தகமும் (5-10-10)

459. ஸுகோஷ: -இப்பெருமையாலே உபநி ஷத்துக்கள் முழங்கும் மேன்மையுடையவன், பாற்கடலைக் கடையும்போது, தேவர்கள் கோஷ மும் அஸுரர்களது கோஷமும் கலந்திருந்ததால் அற்புதமான கோஷத்தை உடையவன்.

மொழிபட்டு ஓடும் கவியமுதம் (8-10-5)
[சொல்லில் அடங்காமல், பெருவெள்ளம் போல் பரந்த கவி - துதி.]

ஆறுமலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி, அரவு
ஊறு சுலாய் மலை தேய்க்கும் ஒலி கடல்
மாறு சுழன்று அழைக்கின்ற ஒலி (7-4-2)

460. ஸுகத: - தனது கல்யாண குணங்க ளாலே யாவர்க்கும் இன்பம் தருபவன்.

வல்வினையேனை ஈர்க்கின்ற குணங்களை
உடையாய் (8-1-8)

[குணங்கள்-சிறந்த கல்யாண குணங்கள்]

461. ஸுஹ்ருத்: - இதற்குக் காரணம், யாவ ரும் தன்னைக் கண்டு உய்யவேண்டும் என்ற மனப்பான்மை உடையவன்.

ஓடும் புள் ஏறி, சூடும் தண் துழாய் (1-8-1)

[புள் ஏறி ஓடும், தண் துழாய் சூடும் தன்னைச் சுமந்து உய்ய வேண்டும் என்று கருதும் கருடன் மேல இவன ஊர்ந்து செல்வான். இவ்வாறே தண் துழாய் (விரும்புவதால் இதை சூடுவான்)]

462. மநோஹர: - இத்தகை மனப்பான்மை யால் நம் உள்ளத்தைக் கவர்பவன்.

கன்னல், பால, அமுதாகி என் நெஞ்சம்

கழியானே. (5-5-10)

463. ஜிதக்ரோத: - அடியார்களது காமம். இந்தக காமம், பெறுவிட்டால் இவர்கள் கோள்ளும் கோபம் இவற்றைப் போக்கியவன்.

அடியார் அல்லல் தவிர்த்த (8-8-5)

464. வீரபாஹு: - வீரம் வாய்ந்த திருத் தோள்கள் உடையவன். திருப்பாற்கடலைக் கடையும்போது, "நான், நான்" என்று ஒன்றன்பின் ஒன்றாய் இயங்கும் தோள்கள் ஆயிரம் பெற்ற வன்.

மற்பொரு தோளுடைமாயப் பிரானுக்கு (6-6-10)

465. விதாரண : - இத்தகைய தோள்க ளால் பகைவர்களை அழித்தவன்.

அசுரரைத் தகர்க்கும் தோளும் நான்குடை (10-1-1)

*******

(தொடரும்)

# திருப்பதியிலிருந்து இரயில் கால நேர விவரங்கள்

## அகல இருப்புப்பாதை

| இரயில் எண். | புறப்படும் நேரம் | சேரும் இடம் | இரயில் பெயர் |
|---|---|---|---|
| 475 | 23-30 | காகினாடா | காகினாடா பிரயாணி வண்டி |
| 217 | 22-00 | மைசூர் | மைசூர் பிரயாணி வண்டி |
| 7425 | 18-30 | செகந்திராபாத் | நாராயணாத்ரி விரைவு வண்டி |
| 7487 | 19-00 | விசாகப்பட்டினம் | திருமலா விரைவு வண்டி |
| 7430 | 15-30 | ஹைதராபாத் | ராயலசீமா விரைவு வண்டி |
| 6054 | 10-05 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 559 | 14-15 | ஓங்கோல் | ஓங்கோல் பிரயாணி வண்டி |
| 7489 | 13-45 | | வாரணாஸி விரைவு வண்டி (செவ்வாய்க்கிழமை) |
| 7490 | 13-45 | கொச்சி | கொச்சின் விரைவு வண்டி (ஞாயிற்றுக்கிழமை) |
| 7491 | 13-45 | வாரணாசி | வாரணாஸி விரைவு வண்டி (புதன்/வெள்ளிக்கிழமை) |
| 8480 | 9-45 | பூரி | பூரி விரைவு வண்டி |
| 6058 | 17-30 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 6208 | 6-30 | ஹைதராபாத் | கடப்பா விரைவு வண்டி |
| 529 | 6-55 | கூடூர் | கூடூர் பிரயாணி வண்டி |
| 7405 | 5-30 | ஹைதராபாத் | கிருஷ்ணா விரைவு வண்டி |
| 196 | 4-05 | அரக்கோணம் | அரக்கோணம் பிரயாணி வண்டி |

## குறுகிய இருப்புப்பாதை

| இரயில் எண். | புறப்படும் நேரம் | சேரும் இடம் | இரயில் பெயர் |
|---|---|---|---|
| 6799 | 15-40 | மதுரை | மீனாட்சி விரைவு வண்டி |
| 247 | 6-00 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 157 | 10-30 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 7598 | 14-40 | மெஹபூப்நகர் | வெங்கடாத்ரி விரைவு வண்டி |
| 187 | 17-30 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 191 | 7-00 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 287 | 21-45 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 643 | 8-45 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |

# அபிக்ஞான சாகுந்தலம்

திரு. என். ராமசர்மா - கும்பகோணம்.

உலக மொழிகள் அனைத்திலும் மிகச் சிறந்த மொழியாக எல்லா அறிஞர்களாலும் கருதப்படும் மொழி "சமஸ்கிருதம்". பாரத நாட்டின் உயிர் மூச்சு சம்ஸ்கிருதம். "சமஸ்கிருத மொழியும் அதன் இலக்கியங்களுமே பாரத நாட்டின் தலையாய செல்வம் என்று நான் கருதுகிறேன்" என்றுர் ஜவஹர்லால் நேரு.

மொழியின் செழிப்பைத் தீர்மானிப்பவை இலக்கியங்கள். இயல், இசை, நாடகம் எனும் மூவகை இலக்கியத்திலும் நாடக இலக்கியமே பழமையானது. நாடக இலக்கியம் ஓங்கி நிற்கும் மொழியே செழிப்பான மொழியாகக் கருதப்படும். சம்ஸ்கிருத பாஷையில் காணப்படும் நாடக இலக்கியங்கள் போல் வேறு எந்த பாஷையிலும் இல்லை.

நாடக இலக்கியத்தின் முன்னோடியாகக் கருதப்படுபவன் மகாகவி பாஸன். பாரதி மகாகவி என்று பெயர் பெற்றது கூட அவன் கவிதைகள் நாடக இலக்கியப் பாணியில் அமைந்த காரணத்தால்தான். நாடக இலக்கிய அரங்கில் பாஸனுக்கு அடுத்து பெருமை பெறுபவன் மகாகவி காளிதாஸன். பாஸனைப் பின் பற்றி வந்தாலும் பல இடங்களில் காளிதாஸன் பாஸனையும் விஞ்சி நிற்கிறுன்.

மாளவிகாக்னிமித்ரம், விக்ரமோர் - வசீயம், அபிக்ஞான சாகுந்தலம் என மூன்று நாடகங்களை காளிதாஸன் எழுதியுள்ளான். இம்மூன்றிலும் சிறந்து நிற்பது - நாடக இலக்கியத்திற்கே ஒரு எடுத்துக்காட்டாக இருப்பது சாகுந்தலமே.

இப்படி ஒரு ஆதர்ச காவியமாக இருக்கும் பெருமை இதற்கு மட்டும் எப்படி அமைந்தது? ஒரு நூல் ஐந்து வகைகளில் பெருமை பெறுவதாக அறிஞர்கள் கூறுவர். சொல்லும் விதத்தால், சொல்லப்படும் விஷயத்தால், சொல்பவனைப் பொருத்து, சொல்லும் பாஷையால், நோக்கத்தால் என்று ஐந்து அம்சங்களும் சேர்ந்து அமைவது அரிது. சாகுந்தலத்தில் அவை அமைந்திருக்கின்றன.

சொல்பவன் காளிதாஸன். சொல்லப்படும் பாஷையோ பூரணத்துவம் நிறைந்த சம்ஸ்கிருத பாஷை. சொல்லப்படும் விஷயமோ இந்நாட்டிற்கே பெயர் கொடுத்து பெருமை சேர்த்த பரதனைப் பெற்று எடுத்த விச்வாமித்திர முனிவரின் குமாரியான சகுந்தலையின் ஜீவித சரித்திரம்; சொல் வண்ணமோ நவரஸங்களும் ததும்பி நின்று படிப்பவனின் ஆழ்மனதையும் தொட்டுச் சிலிர்க்க வைக்கும் கவித்திறம்; சிறுமையைக் கண்டு சீறி எழும் ஒரு பெண் நினைத்தால் எதனையும் சாதிக்க முடியும் என்று பெண்ணின் பெருமையைப் பறை சாற்றும் காவியம் - இவற்றைக் காட்டிலும் இந்நூலுக்கு வேறு என்ன பெருமை வேண்டும்?

நாடக இலக்கியத்தின் முழுமையான பரிமாணத்தை, பூர்ணத்துவத்தை சாகுந்தலத்தில் காணலாம். சோகம் கவ்வி நிற்கும் நான்காவது அங்கத்தில் காளிதாஸனின் கவித்துவம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

மஹாபாரதத்தின் ஆதி பர்வத்தில் வரும் சகுந்தலையின் சரித்திரத்தை தனதாக்கிக் கொண்டான் காளிதாஸன். அது ஒரு தங்கக்கட்டி போல. அதைத் தனது சிந்தனைத் தீயில் உருக்கிக் கற்பனை எனும் உளி கொண்டு ஓர் அற்புதச் சொல்லாபரணம் படைத்தான்.

இந்நாடகத்தின் ஒவ்வொரு பாத்திரமும் உயிரோடு உலவும்; பேசும். பாத்திரங்கள் நெஞ்சைத்தொடும் பாத்திரங்கள்.

காதல், நகை, கருணை, கோபம், வீரம், பயம், அருவருப்பு, அற்புதம், சாந்தம் ஆகிய ஒன்பது சுவைகளும் நிறைந்திருந்தாலும் இனம் புரியாத காதற் சுவையும், சோகச் சுவையுமே நாடகம் முழுவதும் ஊடுபாவோட்டமாகப் பரவியிருக்கக் காணலாம்.

இயல் இசை இரண்டையும் தன்னுள் கொண்ட நாடக இலக்கியம் சாகுந்தலம். விக்ஞான அறிவும், மருத்துவ அறிவும், மனோதத்துவமும், வேதாந்த ஞானமும் ஆங்காங்கே சுடர் விடக்காணலாம்.

உவமை நயம் பற்றியோ கேட்கவே வேண்டாம். உவமைகளைப் படைப்பதில் காளிதாஸன் ஒரு சக்ரவரத்தி, சாகுந்தலம் நாடகமாயிருப்பதால் உவமை நயம் ஒவ்வொருவர் பேச்சிலும் பெருக்கெடுத்து ஓடுகிறது. இது ஏழு அங்கங்களை கொண்ட ஒரு நாடக இலக்கியம்.

வேட்டையாட வனத்திற்கு வந்த துஷ்யந்த மன்னன் தற்செயலாக கணவ முனிவரின் ஆசிரமத்திற்குள் நுழைகின்றான். அவரது வளர்ப்பு மகளான அழகுப்பெட்டகமான சகுந்தலையைத் தோழிகளுடன் பார்க்கிறான். அது சமயம் சகுந்தலையை ஒரு வண்டு சுற்றிச் சுற்றி வந்து துரத்துகிறது. அவள் பயப்படுகிறாள். இவ்வாசிரமம் இருக்கும் வனம் மன்னன் துஷ்யந்தன் பராமரிப்பில் உள்ளது, அவனே வந்து காப்பான் என்று கேலி செய்கின்றனர் தோழிகள். கண்டதும் காதல் கொள்கிறான். தோழிகள் மூலம் சகுந்தலை விசுமாத்திரருக்கும் மேனகைக்கும் பிறந்தவள் என்று அறிகிறான். அக்குல மகளை விவாஹத்தில் கைப்பிடிக்க விரும்புகிறான். இதுவே முதல் அங்கம் கூறும் கதை.

விதூஷகன் வேட்டையாடுதலின் தீமை பற்றி பேசுவதும், சகுந்தலையை நினைத்து மன்னன் வேட்டையை நிறுத்துவதும், அரக்கர்களிடம் இருந்து காக்குமாறு முனிவர்கள் வேண்டுவதும் இரண்டாவது அங்கத்தில் கூறப்படுகின்றன.

துஷ்யந்தனைக் கண்டது முதல் காதல் கொண்டவளாய், பிரிவாற்றாமையால் நோயுறுவதும், தோழிகளின் ஆலோசனையின்படி கடிதம் எழுதத் துவங்குவதும், கேட்டுக்கொண்டே மன்னன் வருவதும், காந்தர்வ முறையில் விவாஹம் செய்து கொள்வதும், ராஜமுத்திரை பதித்த மோதிரத்தைக் கொடுப்பதும் மூன்றுவது அங்கத்தில் கூறப்படுகின்றன.

சகுந்தலையின் தோழிகளான பிரியம்வதா, அநஸூயா இவர்களின் உரையாடலோடு அடுத்த அங்கம் துவங்குகிறது. துஷ்யந்தன் கண்டு கொள்ளாமலிருப்பதும், கண்வரின் வரவும், சகுந்தலை துர்வாஸரிடம் பெற்ற சாபமும், அசரீரி கண்வரிடம் சகுந்தலை விவாஹம் பற்றிக்கூறி அவள் கர்ப்பமாக இருப்பது பற்றி கூறுவதும் இவ்வங்கத்தில் கூறப்படுகின்றன. கண்வ மகரிஷி மகள் சகுந்தலைக்குப் பிரியா விடை கொடுக்கும் நெஞ்சை நெகிழ வைக்கும் காட்சியோடு நான்காவது அங்கம் முடிகிறது.

அடுத்த அங்கத்தில் முனிவரின் சீடர்கள் சகுந்தலையை மன்னனின் சபைக்கு அழைத்து வருகின்றனர். சாபத்தாலும், மன்னன் கொடுத்த மோதிரத்தை இழந்தமையாலும், சகுந்தலையை இன்னார் என உணர முடியாதவனாகிறான் மன்னன். சகுந்தலையை ஏற்க மறுக்கிறான். முனிவரின் சீடர்கள், வேலைக்காரி போல் நடத்தப்பட்டாலும்கூட மனைவிக்குக் கணவன் வீடே புகலிடம், पतिकुले तव दास्यामपि क्षमम्। என்று கூறி அவளைவிட்டுச் சென்று விடுகின்றனர். கர்ப்பமாயிருக்கும் பெண்ணைத் துரத்துதல் தகாது எனக் கருதி ராஜ புரோஹிதர் தான் பராமரிக்க விரும்புகிறார். அதுசமயம் தாயான மேனகையை ஒரு தேவ சக்தியாக வந்து அவளை அழைத்துச்சென்று விடுகிறாள். தனக்கு நேர்ந்த கதி தன் மகளுக்கு நேர்வதை விரும்பவில்லை அவள். மரீசி முனிவரின் ஆசிரமத்தில் சகுந்தலை பரதனைப் பெற்றெடுக்கிறாள்.

தொடர்வது ஒரு திடீர்த் திருப்பம். நீராடும் பொழுது சகுந்தலையால் நதியில் காணமற்போக்கப்பட்ட மன்னனின் மோதிரத்தை ஒரு மீன் விழுங்கியதும், அதை ஒரு செம்படவன் பிடிப்பதும், அதை அறுத்தபோது ராஜமுத்திரையுடன் கூடிய மோதிரத்தைப் பார்த்து அரச சபையில் சேர்ப்பதும், மோதிரத்தைக் கண்டதும் சகுந்தலை நினைவுக்கு வர தான் செய்த துரோகம் குறித்து வருந்துவதும், சகுந்தலையை நினைத்து உருகுவதும், சகுந்தலையின் தோழி "ஸானுமதி" அருபியாக வந்து எல்லாவற்றையும் அறிவதும் ஆறுவது அங்கத்தில் கூறப்படுகின்றன.

ஏழாவது அங்கத்தில் இந்திரனுக்கு உதவி செய்யும் பொருட்டு அவனால் அனுப்பப்பட்டத் தேரில் ஏறிச்செல்கிறான். ஹேம கூடத்தில் மரீசி முனிவரின் ஆசிரமத்தை அடைகிறான். குட்டி சிங்கத்துடன் அச்சமின்றி விளையாடும் பாலகனைப் பார்க்கிறான். வியந்து போகிறான். அவன் தன் மகன் பரதன் என அறிகிறான். சகுந்தலையை சந்திக்கிறான். நெகிழ்ந்து போகிறான். இருவரின் மன வாட்டத்தையும் நீக்கி சேர்த்து வைக்கிறார் முனிவர் மரீசி.

அத்துடன் நாடகம் நிறைவு பெறுகிறது. பல அறிஞர்கள் இதற்கு உரை எழுதியுள்ளனர். வங்கதேச பாடம், தேவ நாகரி பாடம், காஷ்மீரி பாடம், தென்

ணிந்திய பாடம் என்று சிற் சில வேறுபாடுகளுடன் நால்வகைப் பதிப்புகள் காணக்கிடைக்கின்றன.

காளிதாஸனின் கலைத்திறன் முழுவதுமாக மிளிரும் இந்நாடகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டதன் மூலம் பாரதப் பண்பை உலகறியச் செய்தவர் ஸர் வில்லியம் ஜோன்ஸ். இன்று உலகின் எல்லா மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு எல்லா நாடுகளிலும் அரங்கேறிய பெருமை இந்நாடகத்திற்கு உண்டு.

கவியின் சொல் வண்ணத்திற்குச் சில சான்றுகளைப் பார்ப்போம்.

(1) துஷ்யந்தன் ஓய்வு ஒழிவு இன்றித் தன் ஆட்சி நெறியில் நிற்கிருன். "ஏஷ தர்ம: ஸநாதன" என்று தன் குலத் தர்மத்தைக் காப்பதில் ஊக்கம் குறையாமலேயே இருக்கிருன். அதைக் கவி கூறுகிருர்.

சூரியனின் தேர்க்குதிரைகள் என்றேனும் நின்று ஓய்வெடுத்துக்கொண்டதுண்டா, அல்லும் பகலும் வீசும் காற்றுக்கு ஓய்வேது, உலகைத் தாங்கும் ஆதிசேஷன்தான் பூமி பாரத்தை சற்றே இறக்கி வைத்து ஓய்வெடுக்க நினைத்ததுண்டா? அதுபோல துஷ்யந்தனும் ஆறில் ஒரு பங்கு வரிவாங்குகின்றவனாகத் தொய்வின்றி ஆட்சி புரிகிருன் என்கிருர்.

भानुः सकृद् युक्त तुरङ्ग एव
रात्रिं दिवं गन्धवहः प्रयाति ।
शेषः सदैवाहित भूमिभारः
षष्ठांश वृत्तोरपि धर्म एषः ॥

குதிரைகளின் வேகம், நறுமணத்தைச் சுமந்து வரும் காற்றின் இன்றியமையாமை, சுமையாகக் கருதமால் அலட்சியமாக ஆட்சிப் பொறுப்பை நிர்வகிக்கும் திறன் யாவும் மன்னனிடம் இருந்தது என்பதை சூசகமாகத் தெரிவிக்கிருன் கவி.

(2) சூரியனின் வெப்பம் மிகுந்த கதிர்களைத் தாம் ஏற்று, தன்னை அண்டியவர்களுக்குக் குளிர்ச்சியையும், நிழலையும் தரும் மரம் போல துஷ்யந்தன் தன் சுகத்தைப் பெரிதாகக் கருதாமல் குடிமக்களின் துன்பங்களை எல்லாம் தான் ஏற்றுக்கொண்டு அவர்கள் துயர் நீக்குவானாம்.

अनुभवति हि मूर्ध्ना पादपस्तीव्रमुष्णं
शमयति परितापं छायया संश्रितानाम् ॥

(3) காவிய நாயகியை மிக எளிமையாக அறிமுகப்படுத்துகிருர் கவி. சகுந்தலையை முதன் முதலாகப் பார்க்கிருன் துஷ்யந்தன். பொய்கைக்குப் புதிதாகக் குடிவந்த தாமரை போலிருக்கிருளாம் அவள். உடையைப் பார்த்தால் மரவுரி. பெண்களைப் பட்டாடை ஆபரணங்களுடனேயே பார்த்திருக்கும் இவனுக்கு இது புதிய காட்சி. மரவுரி அவள் அழகைக் குறைக்கவில்லை. அழகுக்கு சோபையூட்டுவதாகவே இருக்கிறது.

பாசி சூழ்ந்திருப்பதாலேயே தாமரையின் அழகுக்கு குறைவுண்டா என்ன? சந்திரனிடம் களங்கம் இருக்கு. அது சந்திரனுக்கு அழகு சேர்க்கிறதே தவிர அதன் சோபையைக்குறைப்பதில்லையே. இனிய அழகே வடிவெடுத்தவளாக இருக்கும் இவள் எதை அணிந்தாலும் அழகு தான் இல்லையோ!

सरसिजमनुविद्धं शैवलेनापि रम्यं
मलिनमपि हिमांशोर्लक्ष्म लक्ष्मीं तनोति ।
इयमधिकमनोज्ञा वल्कलेनापि तन्वी
किमिव हि मधुराणां मण्डनं नाकृतीनाम् ॥

(4) யார் இவள்? மண்ணுலகைச் சேர்ந்தவளோ, அல்லது விண்ணுலகைச் சேர்ந்தவளா? மண்ணும், விண்ணும் இணைந்த திவ்ய அழகாக அன்றோ இருக்கிறது இவள் அழகு.

கண்வ முனிவரின் ஆசிரமத்தில் அல்லவோ வளர்கிருள். இவள் முனி குமாரியாயிருந்தால் இவளை அடைய முடியாதே. தர்மத்தை விட்டு நழுவாத எனது மனம் இவளாலே ஈர்க்கப்படுகிறதே. அது எப்படி?

'நிச்சயமாக இவள் க்ஷத்திரியனான என்னாலே ஏற்கத் தகுந்தவளாகத்தான் இருக்க வேண்டும். புலன்களை வென்றவனும், புருவம்சத்தில் வந்தவனும், துஷ்யந்தன் என்ற பெயரைப் பெற்றவனும், உயர்ந்த தர்மத்தில் மேலான பற்றுள்ளவனுமான என் மனமே இவள்பால் தன்னிச்சையின்றிச் செல்வதால், நிச்சயமாக இவள் என்னால் ஏற்கத் தகுந்த க்ஷத்திரிய கன்னிகையாகத்தான் இருக்கவேண்டும். ஏனென்றால் ஸந்தேக சமயங்களில் சான்றோர்களுக்கு அவர்களது அந்தக் காரணத்தில் எழும் எண்ணமே பிரமாணமாகும் இல்லையோ' என்று மன்னன் தன் எண்ணம் அதர்மமில்லை எனத் தீர்மானிக்கிருன்.

असंशयं क्षत्रपरिग्रहक्षमा
यदार्यमस्यामभिलाषि मे मनः ।
सतां हि सन्देह पदेषु वस्तुषु
प्रमाणमन्तःकरणप्रवृत्तयः ॥

தர்மத்தின் பெருமையை, சான்றோர்களின் சிறப்பினை தர்ம ஆசரணத்தில் உறுதி போன்ற எல்லாவற்றையும் காத

லைப்பேசுமிடத்தில் காட்டியது கவிக்கு ஸநாதன தர்மத்தில் உள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது. குமரில பட்டர் தனது "தந்த்ர வார்த்திக"த்தில் இந்த சுலோகத்தை எடுத்தாண்டிருப்பதே இதன் பெருமைக்குச் சான்று.

(5) முதலில் தயங்கின மன்னன் பிறகு அவள் வரலாறு அறிந்து மகிழ்கிறான். இவன் முனிகுமாரியோ, தீண்டப்பட முடியாத அக்னியோ என நினைத்தேன். தொட்டு, எடுத்து, அணைத்து, அழகு பார்த்து, அழகூட்டித் தலையில் சூட்டி மகிழ வேண்டிய ரத்தினம் என்று நினைக்கிறான். கவிகூறும் அழகே தனி.

भव हृदय साभिलाषं संप्रति सन्देहनिर्णयो जातः ।
आशङ्कसे यदग्निं तदिदं स्पर्शक्षमं रत्नम् ।।

எனவே மனமே साभिलाषं भव என்று தன் மனதைப் பார்த்தே கூறிக்கொள்கிறான்.

“தர்மத்திற்கு மாறுபாடில்லாத ஆசை என் வடிவம்”

विरुद्धो भूतेषु कामोस्मि भरतर्षभ ।

என்றானில்லையோ பகவானும் கீதையில்.

(6) சகுந்தலையை சந்தித்து விட்டுத் திரும்புகிறான் மன்னன். கால்கள் நடக்க உடல் தான் முன்னோக்கிச் செல்கிறதே தவிர, மனது என்னவோ படபடத்துக் கொண்டு திரும்பத் திரும்ப வேகமாக சகுந்தலையை நோக்கியே பின் நோக்கிச் செல்கிறதாம்.

இது எப்படி இருக்கிறது தெரியுமா என்று வர்ணிக்கிறான் கவி. காற்றைக் கிழித்துக் கொண்டு ஒரு தேர் செல்கிறது. தேரின் மேல் கட்டப்பட்டிருக்கும் கொடி காற்றின் வேகம், தேரின் வேகம் இரண்டையும் ஸ்வீகரித்துக்கொண்டு படபடவென்று பின்னோக்கியே பறப்பது போலிருக்கிறது என்கிறான். நயமான ஓர் உவமை.

गच्छति पुरः शरीरं धावति
पश्चादसंस्थितं चेतः ।
चीनांशुकमिव केतोः प्रतिवातं नीयमानस्य ।।

கொடி ரதத்தில் கட்டப்பட்டிருப்பதாலே பிரிந்து செல்ல முடியவில்லை. துடிக்கிறது. இவன் மனமும் சரீரமாகிற ரதத்தில் கொடிபோல கட்டப்பட்டிருப்பதால் பிரித்துக்கொண்டு செல்ல முடியவில்லை.

(7) கண்வர் சகுந்தலைக்குப் பிரியாவிடைக் கொடுக்கும் சமயம் நெகிழ்ந்து விடுகிறார். கண்களில் அவரறியாமல் கண்ணீர் திரையிடுகிறது. பேச முனைந்தால் தொண்டை அடைக்கிறது. நாக்கு புரள மறுக்கிறது. சோகம் மீதூர சகுந்தலையைப் பார்க்கிறார்.

பிறகு தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறார். ‘மகள் என்று பற்று வைத்ததனாலே காட்டில் காயும் கிழங்கும் புசித்து வளர்ந்து வரும் முற்றும் துறந்த எனக்கே இப்படித் துயரம் உண்டாகும் என்றால் இல்லறத்தில் பற்றுகொண்டு உழலும் சாதாரண மனிதன் பெண்ணை விவாஹம் செய்து கொடுத்து முதன் முதல் கணவன் வீடு அனுப்பும் போது எப்படித்தான் துயரம் அடைவான்! அந்தோ ஆச்சரியம்!’ என்கிறார்.

वैक्लव्यं मम तावदीदृशमिदं स्नेहादरण्यौकसः ।
पीड्यन्ते गृहिणः कथं नु तनयाविश्लेषदुःखैर्नवैः ।

(8) உலக இயற்கையை, மனித மனத்தை படம் பிடித்துக் காண்பிப்பதில் காளிதாஸனுக்கு நிகர் யாருண்டு?

உடனே முனிவர் அருகிலிருக்கும் சகுந்தலையால் பேணி வளர்க்கப்பட்ட மரம், செடி, கொடிகளைக் கண்டு கலங்குகிறார்.

செடி கொடிகளே மரங்களே, நம் சகுந்தலை உங்களையும், என்னையும் விட்டு விட்டுச் செல்லப்போகிறாள். உங்களுக்கு நீருற்றி விட்டு தான் அவள் நீரருந்துவாள். மலர் சூட்டிக்கொள்வதிலே மிகுந்த பிரியமிருந்தும் உங்களிடத்துள்ள அன்பினால் துளிரையோ, பூவையோ கிள்ள சகிக்க மாட்டாளே. நீங்கள் அரும்பி மலரும் காலத்தை விழா போலக் கொண்டாடுவாளே. நீங்கள் அனைவரும் கலங்காமல் விடை கொடுக்க வேண்டும் என்று கண் கலங்குகிறார் கண்வர்.

पातुं न प्रथमं व्यवस्यति जलं युष्मास्वपीतेषु या
नादत्ते प्रिय मण्डनापि भवतां स्नेहेन या पल्लवम् ।
आद्ये वः कुसुमः प्रसूति समये यस्या भवत्युत्सवः
सेयं याति शकुन्तला पतिगृहं सर्वैरनुज्ञायताम् ।।

(9) அப்போது அங்கிருக்கும் பறவைகள் குரல் கொடுக்கின்றன. செடி, கொடிகள் பிரிவாற்றாமை தாங்காமல் தலை சாய்கின்றன. இவள் பிரியத்துடன் வளர்த்த மான், கிளம்பும் சமயத்தில் சகுந்தலையின் ஆடையைப் பிடித்து இழுக்கின்றது. என்னை விட்டுப் போகாதே என்கிறதாம்.

கணவர் கண்ணும் கண்ணீருமாய் மகளைப் பார்த்துக் கூறினார். ‘குழந்தாய்! உனக்கு நினைவிருக்கிறதா? ஒரு சமயம் இந்த மான் தர்ப்பைப் புல்லைத் தின்னச் சென்று வாய் உதடுகள் அறுந்து ரத்தம் சொட்ட வந்து நின்ற போது தாய்போல இருந்து மருந்

திட்டுக் காத்தாயே, மறக்குமா இது. ஸத்து மாவு பிசைந்து பிசைந்து இதற்கு ஊட்டுவாயே நினைவிருக்கிறதா? வெளியில் புறப்படும் தாயின் சேலையின் தலைப்பை பிடித்திழுக்கும் குழந்தை போலே இந்த மான் உன்னைப் பிரிய விரும்பாமல் உன் ஆடையை இழுக்கிறது.

यस्य त्वया व्रणविरोपणमिङ्गुदीनां
तैलं न्यषिच्यत मुखे कुशसूचिविद्धे ।
श्यामाकमुष्टिपरिवर्धितको जहाति
सोऽयं न पुत्रकृतकः पदवीं मृगस्ते ।।

இப்படி எல்லா உயிர்களையும் நேசிக்கும் தன்மை இவளிடம் எப்படி வந்தது. ஆதி கவி வால்மீகியினிடத்திலே ஆழ்ந்த காதல் கொண்டவன் காளிதாஸன். ஆகையாலே அவரைப் பின்பற்றி இந்த பாத்திரத்தைப் படைக்கிறுன்.

(10) சகுந்தலையார்? விச்வாமித்திரரின் மகள். அவர் எப்படிப் பட்டவர்? ராம லக்ஷ்மணர்களாலே நன்ருகக் காக்கப் பட்டு இடையூறு இன்றி யாகத்தைச் செய்து முடித்ததும் மறுதினம் காலை எல்லோரோடும் தன் ஆசிரமத்தை விட்டுக் கிளம்புகிறுர். பல வருடங்கள் இருந்த சித்தாச்ரமம். இனி திரும்புவதில்லை என்ற உறுதியோடு கிளம்புகிறுர். அப்போது அந்த ஆச்ரமத்திலிருந்த பறவைகள், மற்ற மான் போன்ற பிராணிகள் யாவும் இவர் தீர்மானமறிந்து இவரோடு புறப்பட்டுவிட்டன. வேரைப் பிய்த்துக்கொண்டு கிளம்பமுடியாத தாவரங்கள் தவிக்கின்றன. அவைகளுக்குப் பிரிய மனமில்லை.

मृगपक्षि गणाश्चैव सिद्धाश्रमनिवासिनः ।
अनुजग्मुर्महात्मानं विश्वामित्रं महामुनिम् ।।

மகாத்மாவும், 'விஸ்வஸ்ய மித்ர: விச்வாமித்ர:' என்ற படி உலகனைத்திற்கும் நண்பரான விச்வாமித்திரரின் மகளான சகுந்தலையிடம் தோழமையுணர்வும், கபடமில்லாத நேசமும் எப்படி இல்லாமல் போகும். இவ்வுணர்வை வெளிப்படுத்துவதில் நான்காவது அங்கம் முன்னிலை வகிக்கிறது.

(11) இந்நாடக காவியம் முழுவதுமே இனம் புரியாத ஒரு சோகம் பரவியிருந்தாலும், நான்காவது அங்கமே சோகத்தை வெளிப்படுத்துவதில் முன் நிற்கிறது.

பிறந்தபோதே பெற்ருேர்களாலும் கைவிடப்பட்டாள். நாணற்புதரிலே மேனகையால் போட்டுச் செல்லப் பட்ட இவளை ருசிபார்க்க நரியும், ஓநாயும் ஒடிவந்த காலத்து சுற்றியிருந்த பறவைகள் பயங்கரமாகக் கத்தி அவற்றைத் துரத்தின. அக்குழந்தையைக் காப்பாற்றின. இதனாலேயே शकुन्तैः लालितः इति शकुन्तला । - என்று பெயர் பெற்ருள். வளர்ந்த பின் கைப்பிடித்தக் கணவனாலும் கைவிடப்பட்டாள். வளர்த்த தந்தையும் இப்போது கைவிடத் துடிக்கிறுர். ஆனால் தான் கொண்ட உறுதியிலிருந்து மட்டும் தன் தந்தை விச்வாமித்திரரைப் போலவே சிறிதும் நழுவாமல் இருந்தாள். இதுவே இவள் பெற்ற பெருமைக்கெல்லாம் காரணமாயிருந்தது. இந்த உறுதியைத் துணையாக அனுப்புகிறுர் கண்வர்.

கடைசியில் தனக்குத்தானே சமாதானம் செய்து கொள்கிறுர். 'பெண் என்று பிறந்துவிட்டாலே ஒரு நாள் மற்ருெருவன் வீட்டிற்குச் செல்ல வேண்டியவள்தானே. மற்ருெருவனுக்குச் சொந்தமானவள்தானே. குழந்தாய் சகுந்தலா! நல்ல இடத்திற்கு உன்னை அனுப்புவதில எனக்கு மகிழ்ச்சியே. என் மனம் இப்போது சலனமற்று இருக்கிறது. என்னிடம் கொடுக்கப் பட்ட ஒரு பொருளை பாதுகாத்து உரிய இடத்தில் சேர்க்கிருேம் என்பதில் நான் நிறைவு பெறுகிறேன்' என்கிறுர்.

अर्थो हि कन्या परकीय एव
तामद्य संप्रेष्य परिग्रहीतुः ।
जातो ममायं विशदः प्रकामं
प्रत्यर्पितन्यास इवान्तरात्मा ।।

தொட்ட இடமெல்லாம் அழகும், இனிமையும் பூத்துக்குலுங்கும் அபிக்ஞான சாகுந்தலமெனும் நாடக நந்தவனத்தில் சில சொல் மலர்களின் நறுமணத்தைப் பார்த்தோம். நவரஸங்களிலும் தலையாய ரஸங்களாயிருக்கும் காதல், கருணை, சோகம் முதலியற்றையும் பார்த்தோம்; அனுபவித்தோம்.

प्रवर्ततां प्रकृतिहिताय पार्थिवः
सरस्वती श्रुतमहतां महीयसाम् ।
ममापि च क्षपयतु नीललोहितः
पुनर्भवं परिगतशक्तिरात्मभूः ।।



# அரசமர வழிபாடு

டாக்டர் ல. வீரராகவன் - மதுரை.

வேதத்தில் பிரபஞ்ச ஒழுங்கை நிலை நிறுத்துபவர்களாக மட்டுமல்லாமல், அறநியதிகளைத் தாங்குவோராகவும் கடவுளர்கள் குறிக்கப்பெறுகினறனர். மித்திரன், வருணன் போன்ற கடவுளர்கள் வானில் உறைபவர்களாயும், இந்திரன், மருதன் போன்ற கடவுளர்கள் இடையில் உறைபவர்களாயும், அக்கினி, சோமன் போன்ற கடவுளர்கள் இப்பூவுலகில் உறைபவர்களாயும் உள்ளனர். மொத்தம் முப்பத்து மூன்று கடவுளர்கள் வேதத்தில் சுட்டப்பெறுகினறனர். இவர்களையெல்லாம் விட மேலானவராகப் பிரஜாபதி சுட்டப்படுகிறார். இவரை இயற்கையின் படைக்கும் ஆற்றலின் உருவகம் எனலாம்.

வேதத்திலேயே, இயற்கையைக் கடவுளுடன் ஒன்றுபடுத்தி வழிபடுகின்ற 'அனைத்திறைக் கொள்கை' உள்ளது. ரிக்வேதத்தின் ஒரு பகுதியில் இது பற்றிய குறிப்பு காணப்படுகிறது. வேத காலத்தில் போற்றப்பட்ட அக்னி, வாயு, சூரியன் என்ற இயற்கைத் தெய்வங்கள் இன்று இந்து சமயத் தலைமைத் தெய்வங்களாக மாற்றம் பெற்றுள்ளனர் என்று நாம் நிறுவ இயலும். இம்மாற்றம் உடனடியாக நிகழ்ந்து விடவில்லை. திராவிடக் கலாச்சாரத்தின் இயல்புகளையும் தன்னுள்ளடக்கி ஆரியக் கலாச்சாரம் மலர்ந்ததில் இதுவும் ஒரு கூறாக அமைந்தது.

திராவிடக் கலாச்சாரத்தில் மக்கள் தங்கள் குலக் குறியீடுகளையே (Totems) வணங்கி வந்தனர். இக்குறியீடுகள் குறிப்பிட்ட வகை மரங்களாகவோ, புனித நதிகளாகவோ, பறவைகளாகவோ இருந்தன. இவற்றைக் கொல்வதோ, துன்புறுத்துவதோ, இவற்றின் இறைச்சியை உண்பதோ விலக்கப்பட்டு வழிபாடு போற்றப்பட்டது. நிலையான இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு அவர்கள் வாழ்ந்தபோதும், இக்குறியீடுகளுக்கு எனத் தனி இருப்பிடமோ, கோயில்களோ இல்லை. சங்க இலக்கியங்களில் சோலைகள், காடுகள், நீர்த்துறைகள், ஊர்புறங்கள் என்பவற்றில் உறைகின்ற தெய்வங்களையும் இல்லுறைகின்ற தெய்வங்களையும் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. இதற்கடுத்து கலப்பு நிகழ்ந்த நிலையில் ஆரியர்களின் இயந்திரங்கள் (Yantras), சாளக்கிராமக் கற்கள், பாணலிங்கங்கள் என்பவை கடவுளுடன் தொடர்புபடுத்தப்பெற்றன. இதன் வளர்ச்சிபெற்ற நிலையில் ஒவ்வொரு கடவுளுக்கும் உரிய மரம், பறவை, அல்லது விலங்கு, ஆயுதங்கள் போன்றன இணைக்கப்பெற்றன.

பூவும் புகையும் சந்தனமும் கொண்டு வழிபாடு நிகழ்த்தப்பெற்ற நிலையில் மாற்றம் ஏற்படுகிறது. வேத மந்திரங்கள் இயற்றப்பெற்று, வழிபாட்டில் நுழைகின்றன. இயற்கைப்பொருள்களின் குணங்கள், அவற்றையுடைய கடவுளின் குணங்களாகப் போற்றப்பெறுகின்றன. மேற்கூறிய கருத்துக்களை 'அரசமர வழிபாட்டின்' மூலம் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

விருட்சநாதன், விருட்சதனன், விருட்சபாகன், நந்தி விருட்சம் என்றெல்லாம் போற்றப்பெறும் அரசமரத்தைப் பகவான் கிருஷ்ணன் கீதையில், மரங்களுள் நான் அரசமரம் என்பதை, "अश्वत्थः सर्ववृक्षाणाम्" என்று புகழ்கிறார்.

இந்த அரசமரத்தை உயிரின் வாழ்வுடன் ஒப்புமைப்படுத்தி உபநிடதங்கள், கீதை விளக்குகின்றன.

"ऊर्ध्वमूलोऽवाक् शाखा एषोऽश्वत्थः सनातनः ।"
எனக் கடோபநிஷத்தும்

"ऊर्ध्वमूलमधः शाखमश्वत्थं प्राहुरव्ययम्"
எனக் கீதையும் கூறுகிறது. அதாவது மேலே வேரொடு கீழே கிளையாக அழியாத அரசமரம் போல் அமைவது வாழ்வு என்கிறது கீதை.

உடலை வெப்பத்தினின்று காப்பது மட்டுமல்லாமல், நமது ஆன்மாவை அரசமரம் மூவிதத் துன்பங்களினின்று காக்கிறது. மேன்மேலும் அத்துன்பங்கள் வராமல் காக்கின்ற அறிவும் தருகிறது. ஒரு மனிதன் அறிய வேண்டிய போதத்தைத் (அறிவை) தருவதால் இவ்வரச மரம் 'போதி மரம்' என்று புகழப்பெறுகிறது. இதனையே,

"त्वं धामा सर्वधाम्नां च बोधात्मा बोधिरूच्यते ।"
"मयाऽऽश्लिष्टोऽद्य भगवन् वृक्षश्रेष्ट वनस्पते ।।"

என்று போற்றுவர்.

இத்துணை சிறப்பு வாய்ந்த அரசமரத்தின் மேற்பகுதி பிரம்மனாகவும், நடுப்பகுதி விஷ்

ணுவாகவும், அடிப்பகுதி சிவனாகவும் போற்றப்பெறுகிறது. இதனை,

''मूलतो ब्रह्मरूपाय मध्येतो विष्णुरूपाय ।
अग्रतो शिवरूपाय वृक्षराजाय ते नमः ।।''

என்ற மந்திரம் உணர்த்துகிறது. இம்மந்திரத்தைச் சனிக்கிழமை காலையில் நீராடி, தூய மனத்துடன் அரசமரத்தை நூற்றியெட்டு முறை வலம் வந்து உச்சரிக்க வேண்டும். யாருடனும் பேசுதல் கூடாது. சிரத்தையுடனும் நம்பிக்கையுடனும் இம்மந்திரத்தைக் கூறி வலம் வந்தால் மக்கட்பேறு, நீண்ட ஆயுள், நோய்கள் நீங்குதலோடு அனைத்துவிதமான சௌபாக்கியங்களும் கிட்டும்.

கங்கையை நினைத்த மாத்திரத்திலேய பாபங்கள் அழிவது போல் இந்த அரசமரத்தினைப் பற்றிக் கேட்பதால், பார்ப்பதால், பேசுவதால், தொடுவதால், தியானம் செய்வதால் பாபங்கள் அழிகின்றன.

''दुरितानि प्रणश्यन्ति नृणामश्वत्थ सेविनाम् ।
दृष्टः स्पृष्टः श्रुतोध्यातः कीर्तितः संहरव्यघम् ।।''

சமயம் என்பது பெரிதும் மனிதனின் நம்பிக்கையைச் சார்ந்தது. நம்பிக்கையின்றிச் செய்யப்படும் எதுவும் வீண். எனவே, நம்பிக்கையுடன் அரசமரத்தை வலம் வந்து நலம் பல பெறுவோம்.



# அனுமன் தந்த ஆனந்தம்

**புலவர். ச. சுந்தரேசன் - சிதம்பரம்.**

சூரியன தன பேரொளி ஆற்றலினாலும் தன் ஈரப்புத் தனமையாலும் தனனைச் சுற்றிவரும் கோளகளை அடங்கக்கொண்டு அக்கோள்களைத் தொழிற்படுத்துகிறுன். இது அறிவியலார் ஆய்வின உணமை. இது போல் கடவுள உலக உயிரகளைத் தனது அருளாற்றலால அகப்படுத்தி ஐந்து தொழில்களையும் செயறபடுத்துகிறுர். இது மெய்ஞ்ஞானிகள் கணடறிந்த உணமை.

முதலது உலகியலறிவு. இரண்டாவது உயிரியலறிவு. முதலது விஞ்ஞானம். இரணடாவது மெய்ஞ்ஞானம். இருசாரரின் முடிவுகளை ஏற்பது நமது உரிமையும் கடமையுமாகும். இந்த உண்மைகளையறிந்த சைவர்கள் சூரியனை சிவசூரியன் என்றும், வைணவர்கள் சூரியனை சூரிய நாராயணன் என்றும் பெயரிட்டுப் போற்றி வருகிறுர்கள். தத்தம் முழுமுதற்கடவுள் பெயருடன் சூரியனை இணைத்து வணங்கிவருவது சிந்திக்கத்தக்கது. வணங்கத்தக்கது. வரவேற்கத்தக்கது.

இச் சூரிய குலத்தில் உதித்தவர் இராமச் சந்திரமூர்த்தி. இவரது நெறி மனித வாழ்வின் புனிதநெறி. இராமர் தம்மிடம் வந்தவர்கட்கெல்லாம் அருள வழங்குவதோடு, தாம செல்லும் இடங்களிலெல்லாம் புனிதநெறிகளை நிலைநாட்டிச் சென்ற முறைகளை நன்கறிவோம். முனிவர்கள், மக்கள், அரக்கர்கள், விலங்கினங்கள், பறவைகள் இப்படி எல்லா உயிர்கட்கும் அருள் செய்து காத்த நிலைகளைக் காண்கின்றோம்.

தீமையை நீக்குவது. நன்மையைக் காப்பது. இதுவே இராமாவதாரததின் நோக்கம்.

நமது ஆன்மாதான் (உயிர்தான்) ஸ்ரீராமர். அந்த உயிரும் ஆனந்தத்தில் திளைக்க வேணடும். அந்த ஆனந்தமே சீதை. எனவே ஆனந்தத்தைத் தேடி ஆன்மா செல்கின்றது. மெய்யுணர்வுதான் அனுமார். இம் மெய்யுணர்வே இலங்கையாகிய சரீரத்தில் உள்ள ஆனந்தத்தைக் கண்டு பிடிக்கிறது. தூல சரீரமாகிய இலங்கையையழித்து, இராஜஸ குண இராவணனையும் தாமஸ குண கும்ப கர்ணனையும் மாயத்து, வீபீஷணனாகிய சத்துவ குணத்திற்கு முடிசூட்டி ஆனந்த மயமானசீதையை மீட்டுத்தந்தது மெய்யுணர்வு. ஆனந்தத்தோடு சேர்ந்த உயிர் அருடசெங்கோல் பெற்று அருளாட்சி செயது வருகிறது.



# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## தி

திருமகள்
திருமங்கை - பெரிய பிராட்டியார்
திருமஞ்சனம் பண்ணுதல் - நீராட்டுதல்
திருமணங்கொல்லை - திருமங்கையாழ்வார் கள்வராய் இருந்தபோது பெருமாளை மடக்கிய இடம்.
திருமணிக்கூடம் - திருநாங்கூர் திவ்ய தேசங்களில் ஒன்று.
திருமணித்தாவடம் - துளசிமணி தாமரை மணி ஆகியவற்றாலான தொப்புள் வரை வடமாக அணியும் மாலை.
திருமணிவண்ணன் - திரு-ஒளி. ஒளிமிக்க நீல மேனி போலே குளிர்ந்த வடிவையுடைய பெருமான்.
திருமருகன - மாப்பிள்ளை, மருமகன்
திருமலை - 108 திவ்ய தேசங்களுள் இரண்டாவதாகிய திவ்ய தேசம், திருவேங்கடம்
திருமறுமார்பன் - திருவான பிராட்டியையும் ஸ்ரீவத்ஸம் என்னும் மச்சத்தையும் மார்பிலே உடைய எம்பெருமான்.
திருமடந்தை - ஸ்ரீதேவி, மகாலக்ஷ்மி
திருமலர் - விரும்பத்தக்க தாமரை
திருமாதிரம் - ஒரு பிரதேசம்
திருமாது
திருமாமகள் - லக்ஷ்மியைக் குறிக்கும் பிற
திருமகளிர் பெயர்கள்
திருமாமணிமண்டபம் - பரமபதத்திலுள்ள திவ்ய ரத்ன மண்டபம். (ஸ்ரீரங்கம் கோயிலில் ஆயிரம் கால் மண்டபத்தின் நடுவில் அத்யயன உற்சவத்தின்போது திருவாய்மொழித் திருநாளன்று) பெருமாள் எழுந்தருளும் மண்டபம்
திருமால் - திருவானபிராட்டி பக்கல் மால்-மையலையுடையவன்
திருமாலவன்கவி - திருமாலுக்குத் தகுதியான கவி. நம்மாழ்வார் முதலானவர்கள்.

திருமாலிருஞ்சோலைமலை - 108 திவ்ய தேசங்களுள் ஒன்று, அழகர்மலை
திருமுகம் - பிராட்டி முகம், அரச கட்டளை; கடிதம்
திருமுகப்பாசுரம் - திருமாலைப்பற்றிய ஆரம்ப வாக்கியம்
திருமுகம்படி - எம்பெருமான் தானே அருளிச்செய்தது.
திருமுடி - திருவபிஷேகம், கிரீடம்
திருமுடிக்குறை - ஸ்ரீரங்கத்தில் பெருமாளுடைய திருமுடிப்பக்கத்திலுள்ள காவேரியின் இடையிலுள்ள இடம்.
திருமுத்துக்குடை - பெருமாளுடைய திருமுகத்துக்குப் பிடிக்கும் குடை.
திருமுற்றம் - கோயில்
திருமுற்றத்தடியார் - கோயிலிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள்
திருமுழிக்களம் - மலைநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று.
திருமேனியடிகள் - வடிவழகையும் அவயவ அழகையும் காட்டி ஆழ்வாரை எழுதிக்கொண்ட பெருமான்.
திருமேனியம்மான் - (வடிவழகாலே) ஸர்வேச்வரன் என்று தோற்றும்படி இருக்கிறவன்
திருமொழி - சிறந்த சொல். இனிய சொல், பெரியாழ்வார் திருமொழி, பெருமாள் திருமொழி, நாச்சியார் திருமொழி, பெரிய திருமொழி என்று நாலாயிரத்தில் நான்கு திருமொழிகளுக்குப் பெயர்.
திருமொழித்திருநாள் - மார்கழி அத்யயன உற்சவத்தில் பகல்பத்தில் நான்கு திருமொழியோடு கூடிய முதல் இரண்டு ஆயிரம் பாசுரங்கள் சேவிக்கப்படும் திருநாள்.
திருவடி - எம்பெருமான் திருவடி; ஸ்வாமி கருடன், அனு

மான் ஆகியோர்க்கும் பெயர். நடப்பதற்கு உபயோகப்படுத்தும் தன் திருவடியின் ஸ்தானத்திலே கருடனையும் அனுமானையும் எம்பெருமான் உபயோகப்படுத்துவதால் அவர்களுக்கு திருவடி என்ற பெயர் ஏற்பட்டதாகப் பெரியோர் பகர்வர்.

திருவடி திருவடி - ஸ்வாமிக்கும் ஸ்வாமி; எல்லார்க்கும் தலைவன்

திருவடிநிலை - பாதுகை

திருவடிவு - திருவான பிராட்டியின் வடிவு

திருவணுக்கன் திருவாசல் - ஸ்ரீரங்கத்தில் ஸந்நிதி வாசல். ஜயவிஜய துவார பாலகர்கள் உள்ள மணிக்கதவு வாசல்; குடைவாசல். (பெருமாள் எழுந்தருளும் போது குடை பிடிப்பர்)

திருவபிஷேகம் - பட்டாபிஷேகம்; கிரீடம்

திருவயிந்திரபுரம் - 108 திருப்பதிகளுள் ஒன்று. (அஹிந்த்ரபுரம் என்ற வடசொல் அயிநதிரபுரமாயிற்று. அஹீந்த்ரன் திருவனந்தாழ்வான். அவன் பூஜித்த திருத்தலமாதலால் இப்பெயர் வந்தது.)

திருவரங்கம் - 108 திவ்ய தேசங்களுள் முதன்மையான ஸ்தலம் ஸ்ரீரங்கம். பத்து ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடிய திருப்பதி.

திருவரங்கச்செல்வனார் - ரங்கநாதன்

திருவரசு - சந்நியாசிகளைப் புதைக்குமிடம் (அங்கே அரசமரம் நடுவதால் திருவரசு என்ற பெயர் பெற்றது.)

திருவருட்கமுகு - எம்பெருமான் அருளால் வளர்ந்த பாக்குமரம்

திருவலக நாயகம் - ஸ்தாநீகம்; திருவோலக்க நாயகம்

திருவன் - ஸ்ரீமான்

திருவற்று - எம்பெருமான்மேல் சிறிதேனும் விருப்பமில்லாத நிலை; பசையற்று.

திருவாகம் - அழகிய திவ்ய மங்களதிருமேனி.

திருவாகாரம் - 'அகலகில்லேன் இறையும்' என்று பிராட்டி இருக்கும் எம்பெருமானின் திருமார்பு

திருவாணை - பெரிய பிராட்டியார் கட்டளை

திருவாணை வளைத்துக் கூப்பிடுகை - பெரிய பிராட்டியார்மேல் ஆணையிட்டுச் சொல்லுகை; சபதமிடுகை

திருவாய்மொழி - நம்மாழ்வார் அருளிய பிரபந்தம் 1102 பாடல்கள். உகவாதார் நெஞ்சும் உளுக்கும்படியான பிரபந்தம். மனிதனால் நினைந்து பேசாது வாயினால் மட்டும் பேசிய மொழி. வாய்வெருவின மொழி.

திருவாட்டி - செல்வத்துக்கு அதிபதி; பணக்காரி

திருவார்பண் - எம்பெருமானைப் பாடும் நயமிக்க பாடல்

திருவாளன் - ஸ்ரீயையுடையவன்

திருவில்லாத்தேவர் - லக்ஷ்மி ஸம்பந்தமில்லாத ருத்ரன் முதலானோர்

திருவிலேன் - எம்பெருமான் அருளில்லாதவன்.

திருவிடையாட்டம் - திருமகளுக்குக் கொடுத்த கொடை.

திருவிளையாடு சூழல் - விளையாடுமிடம், திருவனந்தாழ்வான் குகை; பிடிக்கை.

திருவிழவு - உற்சவம்; திருநாள்; திவசம்

திருவிளக்குப்பிச்சன் - ஸ்ரீரங்கத்தில் அழகிய மணவாளனுக்கு அந்தரங்கமாய் இருப்பவன்; பெருமாளிடம் வரும் ஒவ்வொருவரையும் ஏதோ குற்றம் காண்பவன்.

## தி

திருவில் பொலி மறைவாணர் - ஸ்ரீவைஷ்ணவர்; கைங்கர்யச் செல்வத்தாலே மிக்குள்ளவராய் வேதத்துக்குத் தலைவரான பெரியாழ்வார்.

திருவினார்வேதம் - நம்பத்தகுந்த லக்ஷணங்களால் குறைவற்ற வேதம்

திருவினை - திருவை (2ம் வேற்றுமை)

திருவு - எம்பெருமானின் அருள்

திருவுக்கும் திருவாகிய செல்வன் - தானன்றி மற்றவர்களின் செல்வத்துக்கு மூலகாரணமான பிராட்டிக்குச் செல்வமானவன்

திருவுடைப்பிள்ளை - ஸ்ரீமானான பிள்ளை

திருவுடையாள் மணவாளன் - திருவுக்கும் திருவான ஸர்வேசவரனையுடையவளான பெரிய பிராட்டியாருக்கு வல்லபன்

திருவூற்றங்கரை - பட்டர் என்னும் ஆசார்

| | | |
|---|---|---|
| | | யர் கோஷ்டியாக/கூட்டமாக இருந்த இடம். |
| திருவூறல் திருநாள் | - | ஊற்றுப்பறித்து அதில் முதலையாக ஒரு கட்டையைப் போட்டு அருகில யானையை நிறுத்தி நடத்தும் கஜேந்திர மோக்ஷ உற்சவம். |
| திருவெட்டெழுத்து | - | பெரியதிருமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய'. நரனான சீடனுக்கு நாராயணனை ஆசார்யன் பத்ரிகாச்ரமத்தில் உபதேசித்த மந்திரம். |
| திருவேங்கடத்தான் | - | திருமலையப்பன், வேங்கடவன் |
| திருவோலக்கம் | - | பெரியோர்கள் கூடியிருக்கும் சபை/அவை. |
| திரேதம்; திரேதை | - | திரேதாயுகம் |
| திரைந்தவன் | - | எம்பெருமானை நினைந்து நினைந்து உடல் இளைத்தவன் |
| திரைப்பாயல் | - | எம்பெருமான் துயிலும் அலை எறிகிற திருப்பாற்கடல் படுக்கை |
| திரைமாறினகடல் | - | அலை ஓய்ந்த கடல் |
| திரையல் | - | வெற்றிலைச்சுருள் |
| திரையுறி | - | வைத்தவர்களாலும் எடுக்க முடியாத உறி; பெரிய உறி; கயிற்றுப் பின்னலாகக் கொண்டு அமைந்த உறி |
| திரையை வளைத்து | - | திரைபோட்டு |
| தில்லைச் சித்திரகூடம் | - | சிதம்பரம்; 108 திவ்ய தேசங்களுள் ஒன்று |
| திலதம் | - | தலையான ஆபரணம்; திலகம் |
| திலோத்தமை | - | ஒரு அப்ஸரஸ் கன்னிகை; அணங்கு |
| திவம் | - | பரமபதம் |
| திவளுகை | - | விளங்குகை; அசைகை; ஒளிவிடுகை |
| திவளி | - | பசுமையான காய் |
| திளை | - | நெருக்கம், பருமன் |
| திளைக்கும் | - | களியா நிற்கும்; மகிழ்ச்சி அடையும் |
| திளைக்கின்ற நம்பி | - | விளையாடுகின்ற நம்பி |
| திளைகொண்ட | - | பெருமையுடைய |
| திறம் | - | தொழில், கூறுபாடு, சமூகம், உபாயம், படி, திறமை, காரியம், காரணம் |
| திறம் (வினை) | - | மூடிக்கொள்ளுதல்; சாத்திக்கொள்ளுதல் |
| திறத்தது | - | அகப்பட்டது; ஸம்பந்தித்தது |
| திறம்பாமல் | - | பேராமல், தப்பாமல், சலியாமல் |
| திறல்தேன் | - | பலத்தைக் கொடுக்கும் தேன் |
| திறலாகம் | - | மிடுக்குடைய உடல் |
| திறவு | - | அழிக்கமுடியாத ஒன்று எம்பெருமான் ஸங்கல்பம் |
| தின்றவிடம் | - | அரித்த இடம்; தினவு கண்ட இடம் |
| தின்னலுறுதியேல் | - | சாப்பிடுகையில் உறுதியுடனுடனிருந்தாயாகில் |
| தினைத்தனையும் | - | எள்ளத்தனை என்னுமா போலே அளவுபட்ட காலத்தைச் சொல்லுகிறது; சிறிது காலம், நுண்ணிய தானியம். |

★★★★★★★★★★★

# பரசுராம புராணம்

திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

பகவான் பத்து அவதாரங்கள் எடுத்தருளினார். மத்ஸ, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, ஸ்ரீராம, பலராம, கிருஷ்ண, கல்கி என்ற அவதாரங்களே அவை.

இந்த பத்து அவதாரப் பெயர்களில் மத்ஸ புராணம், கூர்ம புராணம், வராக புராணம், நரசிம்ம புராணம், வாமன புராணம், கல்கி புராணம் என்ற ஆறு பெயர்களில் புராணங்கள் உள்ளன.

ஸ்ரீராமருக்கு இராமாயணம் என்ற இதிகாசம் உள்ளது.

பலராம, கிருஷ்ணருக்கு ஸ்ரீமத் பாகவதம் என்ற மகாபுராணம் உள்ளது.

ஆனால் பரசுராமருக்கு மட்டும் ஒரு புராணமோ, இதிகாசமோ இல்லைதான். மற்ற புராணங்களில் சொல்லப்பட்டுள்ள பரசுராமரின் கதைகளைத் தொகுத்தால் பரசுராமருக்கும் ஒரு புராணம்கிட்டாதா என்ன? இதோ பரசுராம புராணம்!

## பரசுராமர்

சந்திரவம்சத்தில் குசாம்பன் என்பவன் ஒருவன். அவன், "எனக்கு இந்திரனுக்குச் சமானமான ஒரு புத்திரன் வேண்டும்" என்று தவம் செய்தான். தேவேந்திரனே அவனுக்குத் தானே மகனாக வந்து பிறந்தான். அவன் காதி எனவும் கௌசிகன் எனவும் வழங்கப்பட்டான். அவனுக்கு சத்தியவதி என்ற பெண் பிறந்தாள்.

பிருகு முனிவரின் மகனாகிய ரிசீக மாமுனிவர் சத்தியவதியைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினார். காதியோ "இவர் முதிய பிராமணனாக உள்ளாரே?" என நினைத்து இவருக்குத் தன் மகளைத் திருமணம் செய்து தரக்கூடாது என்று தீர்மானித்தான். எனவே, "ஒரு காது மட்டும் கறுப்பாகவும் மற்றைய அவயவங்கள் எல்லாம் சந்திரனைப் போலப் பிரகாசிக்கும் படியாயும், காற்றைவிட வேகமாகச் செல்லக்கூடிய ஓராயிரம் குதிரைகளைக் கொடுத்தால் என்புதல்வியைத் தருகின்றேன்" என்றான்.

ரிசீக முனிவரும், "அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிவிட்டு வருணனிடம் சென்று அஸ்வ தீர்த்தத்தில் பிறந்த அதுபோன்ற ஆயிரம் குதிரைகளைக் கொண்டு வந்து அவனிடம் ஒப்படைத்து சத்தியவதியைக் கல்யாணம் செய்து கொண்டார்.

சிறிது காலத்திற்குப்பின்பு சத்தியவதிக்குத் தனக்கு ஒரு பிள்ளை வேண்டும் என்ற ஆசை உண்டாகியது. அதே சமயம் பிள்ளை இல்லாத அவளுடைய தாயாருக்கும் அதே ஆசை வந்தது. அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக ரிசீகர் புத்திரோற்பத்தி செய்யவதற்கு சரு எனப்படும் பால் அன்னம் தயாரித்தார். அதை இரண்டு பாகமாக்கி ஒன்றுக்கு பிராம்மண மந்திரங்களினாலும் இன்னொன்றுக்கு க்ஷத்திரிய மந்திரங்களினாலும் உரு ஏற்றி வைத்துவிட்டு ஸ்நானம் செய்யச்சென்றான்.

தாயும் மகளும் சருவைப் புசிக்கும் போது சத்தியவதியின் தாய் 'உன்னுடைய சருகை எனக்குக்கொடு. ஏனெனில் அவர் உனக்குக் கொடுத்ததால் சிறப்பானதாக இருக்கும்' என்று கூற சத்தியவதியும் ஒப்புக்கொண்டாள்.

குளித்துவிட்டு வந்த ரிசீகர் தன் பத்தினியின் தேகத்தைக் கண்டு விபரீதம் நிகழ்ந்து விட்டது என உணர்ந்தார். "பெண்ணே இவ்வாறு செய்து விட்டாயே! உன் மகன் அரசனாயும், தம்பி பிரம்ம ஞானியாகவும் பிறக்கப்போகிறார்கள் இது விதியின் செயலன்றி வேறல்ல" என்று நொந்து கொண்டார்.

"உனக்கு உக்கிரமான அம்புகளை எய்யக்கூடிய க்ஷத்திரியன் பிறப்பான். உன் தாய்க்கோ பிராமணுச்சாரமுள்ள குமாரன் பிறக்கப்போகிறான்" என்றார்.

அவர் இவ்வாறு கூறியதும் சத்தியவதி அவரது திருவடிகளில் வீழ்ந்து 'பிராணநாதா! அடியாள் மீது அருள்காட்ட வேண்டும். அத்தகு புத்திரன் எனக்கு வேண்டாம். சருவின் பலம் தப்பாதாகையால் எனக்குப் பிறக்கும் பிள்ளையின் பிள்ளை அப்படியாகட்டும்" என்று வேண்டினாள். எனவே ரிசீகர் அவள் மீது கருணை கொண்டு, "நல்லது அப்படியே ஆகட்டும்" என்று அனுக்ரகித்தார்.

எனவே அவளது தாய் பின்னாளில் "பிரம்மரிஷி" என்ற பட்டம் பெற்ற விசுமாதித்திரரையும் சத்யவதி "ஜமதக்னி"யையும்

பெற்றூர்கள். பின்பு சத்யவதி கௌசிகை என்ற நதியாக மாறி விட்டாள்.

ஜமதக்னி முனிவர் இக்ஷ்வாகு வம்சத்து அரசனான ரேணு என்பவரின் புதல்வியான ரேணுகையைத் திருமணம் செய்து கொண்டார். இவர்களுக்கு ஸ்ரீமந் நாராயணனின் அம்சத்தால் சகல க்ஷத்திரிய வம்ச நாசகாரணரான ஸ்ரீபரசுராமர் பிறந்தார்.

சூரிய வம்சத்தில் வந்த கார்த்த வீரியன் ஜமதக்னி முனிவரிடமிருந்து காமதேனுவைக் கைப்பற்றும் பொருட்டுப் பகை ஏற்பட பரசுராமர் தன் பரசுவால் கார்த்த வீரியனைக் கொன்றூர். ஜமதக்னி முனிவர், "பரசுராமா! அரசனைக் கொன்ற பாவம் தொலைய தீர்த்த யாத்திரை சென்று வருவாயாக!" என்றூர்.

அதன்படிப் பரசுராமர் ஒரு வருஷ காலம் தீர்த்த யாத்திரை செய்துவிட்டு ஆசிரமத்திற்குத் திரும்பிவந்தார். அச்சமயம் ஒருநாள் கங்கையிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டு வருவதற்காகச் சென்ற ரேணுகாதேவி அந்தக் கங்காநதியில் தன்னுடைய ஸ்திரீகளோடு பலவிதமான லீலா வினோதங்களைப் புரிந்து களித்துக் கொண்டிருந்த ஒரு கந்தர்வனைப் பார்த்து அவனிடம் மனதைச் செலுத்தியவளாய் க்ஷணநேரம் மெய்மறந்து நின்றுவிட்டாள். பின்பு காலம் தவறி ஆசிரமத்திற்கு வந்த அவளைக் கொன்றுவிடும்படி ஜமதக்னி முனிவர் கட்டளையிட மூத்தவர்கள் தாயைக் கொல்ல மனமின்றி ஒதுங்கினார்கள். அப்போது அவர் பரசுராமரை அழைத்து, 'கற்புத் தவறிய உன்னுடைய தாயையும் தந்தையின் கட்டளையை மீறிய உன் சகோதரர்களையும் உடனே கொல்வாயாக" என்று கூறத் தன் தந்தையின் தவ வலிமை பற்றி நன்ருக அறிந்திருந்த பரசுராமர் அவர்களைக் கோடரியால் வெட்டிக் கொன்று தந்தையிடம் வந்து நிற்க "பரசுராமா! நீதான் உண்மையான பிள்ளை. உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று கூறிய தந்தையிடம் "தன் தாயாரும் தமயன்மாரும் பிழைத்தெழ வேண்டும்; அவர்கள் கொல்லப் பட்டது அவர்கட்குத் தெரியாமலேயே இருக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்.

முனிவரும் அவ்வாறே அருள அவர்களும் தூங்கி எழுந்தவர்கள் போல் எழுந்தார்கள்.

தவத்தின் வலிமைதான் யாழினும் வலியது என்பதை உணர்ந்து கொண்ட பரசுராமர் தவம் செய்ய விரும்பித் தன் தமையன்மாரோடு தபோவனத்திற்குச் சென்றூர்.

பரசுராமர் கார்த்த வீரியார்ஜுனன் தலையை வெட்டிக் கொல்வதைப் பார்த்தவுடனே பயந்து ஓடிவிட்ட அவனுடைய பிள்ளைகள் பதினாயிரம் பேரும் ஓரிடத்திலும் நிம்மதி இல்லாமல் அலைந்து கொண்டிருந்தார்கள். தங்கள் தந்தையைக் கொலைசெய்த பரசுராமனைப் பழிவாங்க வேண்டுமென்ற வெறி உடையவர்களாயும் அதற்கான சக்தி இல்லாதவர்களாயும் திரிந்து கொண்டிருந்தார்கள். பரசுராமர் தவம் செய்யப் போய்விட்டதை அறிந்ததும் ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்தை அடைந்து அப்போது தியானத்தில் லயித்திருந்த முனிவரின் தலையை வெட்டிக் கொன்றுவிட்டார்கள். அதைக் கண்ட முனிபத்தினி ரேணுகை பதறித் துடித்து மிகவும் உக்கிரமாகக் கொதித்தெழுந்து 'அடே துரோகிகளா! தவம் செய்வோரைக் கொல்வதோ தரணி ஆளும் மன்னர்களின் தனிப்பெரும் நீதி?' என்று சீறினாள். அவள்மீது அவர்கள் ஆத்திரத்தோடு இருபத்தியோரு பாணங்களை ஏவினர். அக்கொடிய அம்புகளின் கொடுமையைத் தாங்கமுடியாமல் ரேணுகை கண்களில் நீர் வெள்ளம் பொங்கிவிழ அப்படியே சோர்ந்து சுழன்று பூமியில் விழுந்து விட்டாள். ஆனாலும் அவள் தன் கணவரை நினைத்துத் தியானம் செய்தபடியே தன் புத்திரனாகிய பரசுராமன் வரும் வரையிலும் தன் உயிரைத் தன் உடம்பினுள் பிடித்து வைத்திருந்தாள்.

அந்தச் சமயம் பரசுராமர் தற்செயலாக நைமிசாரணிய வனத்தைவிட்டு நீங்கித் தன் தந்தையாரின் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார். அப்போது ஆசிரமம் பயங்கர அமைதியில் இருப்பது கண்டு அதிவேகமாக உள்ளே வந்தார். அங்கே தன் தந்தை வாளினால் வெட்டப்பட்டு உயிர் நீங்கிக் கிடப்பதையும் தன் தாய் அம்புகள் குத்தித் துளைக்கப்பட்டு மயங்கி விழுந்து கிடப்பதையும் கண்டு மனம் பதைத்தார்.

பெற்றோர்களின் திருவடிகளைப் பல முறைகளும் தொட்டுத் தொட்டுக் கும்பிட்டுத் தன் தாயின் சிரத்தைத் தன் துடையின் மீது எடுத்து வைத்துக் கொண்டு "இந்த மரணத்து எந்த மூர்க்கரால் உண்டாயிற்று!" என்று தன் கையினால் தாயின் முகத்தைத் தடவினான்.

தன் மகனின் குரலையும் ஸ்பரிசத்தையும் உணர்நத ரேணுகை மயக்கத்திலிருந்து சிறிது தெளிவு பெற்றாள். அவள் தன் மகனின் முகத்தை நீர்மல்கும் கண்களால் நோக்கிய படியே நடைபெற்ற விஷயங்களை எல்லாம் பலவீனமான குரலில் கூறிவிட்டு "மைந்தனே! இந்த விஷயங்களை உன்னிடம் கூறும் பொருட்டுத்தான் நான் இதுவரையிலும் என் உயிரைத் தாங்கியிருந்தேன். இப்போது தான் நிம்மதி வந்தது. அந்தப் பாவியர் எனது உடலில் இருபத்தியோரு அம்புகளைப் பிரயோகித்ததனால் அவ்வமிசத்து மூவேழு தலைமுறைகளும் வதைத்து அவர்களுடைய உடல்களைத் சப்தபூமிகளிலும் புரளும்படி வீசி எறிந்து நீ வெற்றிக்கொடி நாட்டி நம் அந்தணர் குலத்தின் வீரத்தை நிலையூன்றச் செய்ய வேண்டும். அப்போதுதான் என் ஆத்மா சாந்தி அடையும்" என உள்ளம் நைந்து கூறி "என் கணவரின் நிழலைத் தொடர்கிறேன்" என உயிர்த் துறந்தாள். தன் தாய் தந்தையரின் கிரியைகளை எந்தவிதக் குறையுமில்லாமல் சிறப்பாகச் செய்து முடித்தார் பரசுராமர். ரேணுகை பூலோகம் எல்லாம் போற்றி வழிபடும் மாரி அம்மன் ஆனாள். ஜமதக்னி முனிவர் பிரும்ம தேவனின் சத்யலோகத்திற்குச் சென்றார். நட்சத்திர பதவி அடைந்து சப்தரிஷிகளும் ஒருவராகத் திகழ்கிறார்.

பின்பு பரசுராமர் இருபத்தியோரு முறை பூமியை வலம் வந்து இருபத்தியோரு தலைமுறையைச் சேர்ந்த க்ஷத்திரியர்களைப் பூண்டோடு ஒழித்தார். பின்பு பூமியைக் காசியப்ர் என்ற முனிவருக்குத் தானம் செய்தார். பரசுராமர் மனைவி பெயர் தரணி.

பரசுராமரின மாணவருள ஒருவர் பீஷ்மர ஆவார். அம்பை என்ற பெண்ணின் பொருட்டு இரக்கம் கொண்டு பீஷ்மரோடு யுத்தம் புரிந்தார். பீஷ்மரின் பிரம்மச்சர்யம் விரதம் அறிந்து யுத்தத்தை நிறுத்திவிட்டார்.

குந்திக்கும் சூரிய தேவனுக்கும் பிறந்து விதியின் செயலால் ராதேயன் என்ற தேரோட்டியிடம் வளர்ந்த கரணன் தன்னை ஒரு பிராம்மணன் என்று அறிமுகம் செய்து கொண்டு பரசுராமரிடம் வில் வித்தை கற்க வந்தான். ஒரு நாள் கர்ணனின் மடியில் தலை வைத்துப் பரசுராமர் தூங்கிக்கொண்டிருந்தார். ஒரு வண்டு கர்ணனின் துடையைத் துளைத்திட இரத்தம் வர ஆரம்பித்தது. தன் உடலை ஆட்டினால் அவரது உறக்கம் கெடும் என்றெண்ணிக் கர்ணன் பேசாதிருந்தான். விழித்தெழுந்த பரசுராமர் இரத்தப்பெருக்கையும் வலியையும் பொறுத்துக்கொள்ள பிராமணனால் ஆகாது என்று உணர்ந்ததால் 'கர்ணன்' க்ஷத்திரியன் என்றறிந்து கர்ணனும் அதை உறுதிப்படுத்தி மன்னிப்புக் கேட்க தம்மிடம் கற்ற வில் வித்தை கர்ணனுக்கு உதவாமல் போகக்கடவது என்று சபித்து விட்டார. இது மகாபாரதப்போரில ஒரு முககியமான திருப்பு முனையாக உதவியது.

பினனர ஜனக மன்னனிடம இருந்த விஷ்ணுவின் வில்லை வளைத்து நாணேற்றி வென்ற ஸ்ரீராமர் சீதையை மணந்து தசரதச் சக்கரவர்த்தியுடன் அயோத்தி நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது, பரசுமார் தன்னிடம் இருக்கும் 'சிவதனுசையும் வளைத்து நாணேற்றினால்தான் விடுவேன்' என்று ஸ்ரீராமரை வழிமறிக்க, ஸ்ரீராமர் சர்வசாதாரணமாக சிவதனுசைக் கையிலெடுத்து நாணேற்றி இலக்கு எது? என்று பரசுராமரைக் கேட்க ஸ்ரீராமர் தன்னைப் போல ஸ்ரீமன் நாராயணனின் அவதாரம் என்பதை மனதில் ஒத்துக்கொண்டு அவருக்கு ஆசி கூறித் தான் தவம் செய்ய மகேந்திர மலைநோக்கிச் சென்றார். தசரதர் நிம்மதிப் பெருமூச்செறிந்து ஸ்ரீராமரோடு சென்றார். உலகிலுள்ள ஏழு சிரஞ்சீவிகளுள் பரசுராமரும் ஒருவர் ஆவார்.

இந்த பூமியை அதாவது அதிலுள்ள உயிரினங்களைத் தகுந்த அரசர் கையில் ஒப்படைத்தார் பரசுராமர். அந்த அரசர்தான் ஸ்ரீராமர். ✪

## அர்ச்சனானந்தர தர்சனம்

திருமலைக்கோயிலில் வெள்ளிக்கிழமை தவிர்த்து மற்றைய நாட்களில் காலை 5 மணி அளவில் அர்ச்சனைக்குப் பிறகு நடைபெறும் அர்ச்சனானந்தர தரிசனம் என்னும் சேவையில் நபர் ஒருவர் ரூ. 100/- செலுத்தி பங்கேற்கலாம். இதற்கென முன்பதிவு முறை எதும் இல்லை. இதற்கான சீட்டுகள் திருமலை 'விஜயா வங்கி' அலுவலகத்தில் பெறலாம்.

# ஸ்ரீக்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்

திரு. பராசரம் பாலசுப்ரமணியன் - திருச்சானூர்.

சங்க இலக்கியங்களில் ஒன்ருன பரிபாடலில் கண்ணன் பின்வருமாறு வருணிக்கப்படுகிருர்.

"மாஅயோயே மாஅயோயே
மறு பிறப்பு அறுக்கும் மாசில்சேவடி
மணிதிகழ் உருபின் மாஅயோயே"

நீலமணியின் நிறத்தையொத்த திருமேனியைக் கொண்டு விளங்கியவன் மாயோன் என்றும், அவனது திருவடிகளைச் சேர்ந்தவர்கள் பிறவிப்பெருங்கடலைக் கடந்து மறுபிறப்பென்பது இல்லாது வீடுபேறு என்னும் பேரின்பத்தை அடைவார் என்பது மேற்கூறிய பாடலால் விளங்குகிறது. மாநிறத்தை உடையவனாதலின் மாயன், மாயவன், மாயோன் என்று அழைக்கப்படுகிருன். இதனையே இளங்கோவடிகள் தன காப்பியத்தில் பின்வருமாறு பாடுகிருர்.

'கரியவனைக் காணுத
கண்ணென்ன கண்ணே?
கண்ணிமைத்துக் காண்பார்தம்
கண்ணென்ன கண்ணே?

'கிருஷ்ண' என்னும் வடமொழி வார்த்தைக்குக் கருமை என்றே பொருள்.

ஸ்ரீகிருஷ்ணனை அறியாதாருண்டோ? இப்பாரத தேசத்தின் கதாநாயகன்; பாரதத்தின் ஒப்பற்றத் தலைவன். எந்த நாட்டு வரலாற்றிலாவது, கிருஷ்ணனைப் போன்ற ஒப்பற்றத் தலைவனை நாம காண முடியுமா? அரசியல் மட்டுமா? ஆன்மீக வாழ்க்கைக்கு அவர் போதித்த கீதையின் பங்கை அளவிடத்தான் முடியுமா?

அன்று மனித இனம் அறியாமை, அதர்மம் போன்ற சுழற்காற்றில் அடிபட்டுத் தவித்துக் கொண்டிருந்தபோது கண்ணன் பிறந்தான். கண்ணன் இன்றைக்கு சுமார் ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சரியாகச் சொல்ல வேண்டுமாயின் கி.மு. 3102 பிப்ரவரி மாதம் இருபதாம் தேதி நள்ளிரவில், துவாரகாப்பட்டினத்தருகிலுள்ள பிரபாஸ தீர்த்தம் என்னும் இடத்தில் தனது அவதார காரியத்தை முடிக்க வேண்டி தன் பூத உடலை நீத்தார். அவர் இப்பாரத தேசத்தில் நூற்றிருபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்தார்.

சாணக்கிய அறிவுத்திறன் கொண்டு நம்முடன் வாழ்ந்து, அண்மையில் மறைந்த இராஜாஜி தன்னுடைய முதிய வயதில் மாபெரும் அரசியல் வாதியாக விளங்கியதை நாமெல்லோரும் அறிவோம். கடவுளின் அவதாரமாகிய கண்ணன் தன் முதிய வயதில் அரசியல் திறனை வெளிப்படுத்தி பாண்டவர்களையும் அறத்தையும் காப்பாற்றியது வியப்பில்லையல்லவா?

கண்ணன் மறைந்தநாளே கலியுகம் பிறந்த நாள். கி.மு. 3102, பிப்ரவரி இருபதாம் நாள் அந்த யுக புருஷன் கண்துஞ்சியநாளே - அந்த நாழிகையே இவ்வுலகமனைத்திற்கும் கலி பிறந்த நாளாகும். Modern Age என்னும் கலியுகம் அன்றுதான் தோன்றியது. கண்ணனின் வரலாற்றுச் சிறப்பை விளக்கும் நூல்கள், மஹாபாரதம், விஷ்ணுபுராணம் மற்றும் ஸ்ரீமத் பாகவதமுமாகும்.

பாகவதத்தில் தஸமஸ்கந்தம் மூன்ருவது அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த நாளின் கோள்நிலை விவரிக்கப்பட்டுள்ளது. அன்று பிரஜாபதி நட்சத்



திரம் என்று கூறப்பட்டுள்ளது. பிரஜாபதி என்றால் ரோகிணி என்று பொருள்.

விஷ்ணுபுராணம் முதல் அஸ்வாஸம் ஐந்தாம் பாகத்தில் இருபத்தாறாவது பாடலில் ஸ்ரீகிருஷ்ணர் சிராவண (ஆவணி) மாதம் தேய்பிறை அஷ்டமியன்று பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

மேலும் ஹரிவம்ஸம் ஐம்பத்திரண்டாம் பகுதியில் மேற்சொன்ன விபரங்களுடன், அவர் நள்ளிரவில் பிறந்தார் என்னும் விபரமும் நமக்குக் கிடைக்கிறது.

மேற்கண்ட நூல்களில் கூறியுள்ள கிரக நிலை, திதி, நட்சத்திரம் ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு, சரித்திர வல்லுநர்களும் கோள்நிலை ஆராய்ச்சி வித்தகர்களும் பின்னோக்கிச் சென்று கண்ணனின் பிறப்பு விபரத்தைக் கண்டறிந்தனர். அதாவது ஸ்ரீகிருஷ்ணர், ஸ்ரீமுகவருஷம் சிராவண மாதம், தேய்ப்பிறை அஷ்டமி, ரோகிணி நட்சத்திரத்தன்று பிறந்தார் என்று கண்டறிந்தனர். (கி.மு. 3228 என்பது ஒரு சிலரின் முடிவு). இது கி.மு. 3227 (B.C.) ஜூலை மாதம் பத்தொன்பதாம் தேதியாகும். அதாவது அவர் பிறப்பு விபரத்தில் கூறிய கோள் நிலைகள் மேற்கண்ட நாளுக்கு மிகச் சரியாகப் பொருந்தியுள்ளது. எனவே அதனை ஆதாரமாகக் கொண்டு ஜோதிட மேதைகள் ஸ்ரீகிருஷ்ணனின் ஜாதகத்தை பின்வருமாறு கணித்துள்ளனர்.

(கீழே காண்க)

மேலைநாடுகளில் சுக்ரனை வீனஸ் என்னும் அழகு தேவதையாகவே குறிப்பிடுகிறார்கள். கண்ணனின் அழகிற்குக் காரணம், அவர் சுக்ரன் வீடாகிய ரிஷபத்தை லக்னமாகவும் இராசியாகவும் கொண்டு பிறந்ததேயாகும். லக்னாதிபதியாகிய சுக்ரன் நவாம்ஸத்தில் தனது சுய இல்லில் பலம் பெற்றதாலும், மூன்றும் வீட்டில் செவ்வாய் வீற்றிருந்து அவருக்கு நீசபங்கமும் ஏற்பட்டதாலும், போர்க்களத்தில் எதிரிகளுக்கு அஞ்சாத சிங்கமாகவும் போர்முறைகளை நன்கு அறிந்தவராகவும், எதிரிகளை அழிக்கும் சர்வ வல்லமை படைத்தவராகவும், அறவழி நடப்போரையும் அறத்தையும் காப்பதே தனது இயற்கையாகவும் கொண்டு விளங்கினார். செவ்வாய் அவரது ஜாதகத்தில் பெற்ற பலத்தின் காரணமாகவே, சிசுபாலன் போன்ற பெரும் எதிரிகளையும் வீழ்த்தும் பேராற்றலைப் பெற்றார். எனினும் லக்னாதிபதியாகிய சுக்ரன் பன்னிரண்டாம் வீட்டோனாகிய செவ்வாயுடனும், இராகுவுடனும் கூடி மூன்றில் இணைந்ததால் சிறைச்சாலையில் பிறக்க வேண்டியதாயிற்று. மனவளத்தை நல்கும் சந்திரன் லக்னத்தில் உச்சம் பெற்றார். சிறந்த அறிவாற்றலை நல்கும் புதன் இரண்டுக்கும் ஐந்துக்குமுரியவனாகி, ஐந்தில் உச்சம் பெற்றார். இதனால் அவரது அறிவாற்றலும் வாக் சாதுர்யமும் எல்லோராலும் போற்றப்பட்டன. அவர் சிறந்த ராஜ தந்திரியாக விளங்கியதற்குக் காரணம், தேவகுருவான வியாழபகவான், ஆத்மகாரகனாகிய சூரியனுடன் நான்காம் வீட்டில் இணைந்ததேயாகும். அவர் தர்மத்தின் காவலன் என்பதற்கு வியாழன் பெற்ற பலமே காரணமாகும். ஏனெனில் அவ்வியாழன் சந்திரனுக்கு நான்கிலமர்ந்து, 'கஜகேசரி' யோகத்தை வழங்குகிறார்.

| | | | |
|---|---|---|---|
| | | ல / சந் | |
| | இராசி | | செவ் சுக் ராகு |
| கேது | | | சூரி குரு |
| | சனி | | புதன் |

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| | அம்சம் | | சந் செவ் |
| புதன் | | | |
| குரு | சனி ராகு | சுக் சூரி | ல |

மேலும் ஏழாம் வீட்டில மர்ந்த யோககாரகனாகிய சனி பகவான் தனது பார்வையால் ஒன்பதாம் வீடு, லக்னம் மற்றும் நான்காம் வீடு ஆகியவற்றை பலம்பெற வைக்கிறார். நான்காம் பாவத்திலுள்ள குருவையும், சூரியனையும் அச்சனி பகவான் நோக்குகிறார். ஒன்பது, பத்துக்குரிய சனியின் பார்வை ஏற்படுவதாலும், நான்குக்குரிய சூரியன் தனது சொந்த வீட்டில் குருவுடன் இணைந்ததாலும், வேதம் வேதாங்கம், வ்யாகரணம், கல்பம், சிக்ஷை ஆகியவன எளிதில் கற்றுத் தேர்ந்தார். இந்நிலையே அவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லா நிலையை உண்டாக்கியது எனலாம்.

எனினும் சிறுவயதில் அவர் பலவிதமான தொல்லைகளுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளானார் என்பதை நாம் அறிகிறோம். அதாவது சுமார் பதினோறு ஆண்டுகாலம் கம்ஸனின் ஆட்களால் பலத்தொல்லைகளை அவர் சந்திக்க வேண்டியிருந்தது. அவையெல்லாமே உயிருக்கு ஆபத்தை விளைவிக்க வந்தவைகளே. இது எதனால்? இதனையே ஜோதிடக்கலை 'பாலாரிஷ்டம்' என்று கூறும். பாலா என்றால் குழந்தை. அரிஷ்டம் என்றால் கண்டங்கள். ஏழாம் வீட்டிற்குரிய செவ்வாய் மாரகாதிபதியுமாவார். அவர் மூன்றிலிருப்பதுவும் சந்திரன் லக்னத்திலிருப்பதுவும் பாலாரிஷ்டத்தைக் கொடுத்தது.

மூத்த சகோதரர்களைக் குறிப்பது பதினொன்றாம் வீடாகும். இவ்வீட்டிற்குரிய குரு நவாம்ஸத்தில் எட்டிலமர்ந்தது, இவரது பெற்றோர்களுக்கு இவர எட்டாவது குழந்தை எனபதை விளக்கும்.

பொதுவாகவே தாய்மாமனை ஆறாம் பாவம் குறிக்கும். அவ்வீட்டிற்குரிய சுகரன், ஏழுக்குடைய செவ்வாயுடன் இணைந்தார். அச்செவ்வாய் தாய்மாமனின் மாரகஸ்தானாதிபதியாகும். எனவே செவ்வாய் தசையில் தாய்மாமனாகிய கம்ஸனைக் கொல்லவேண்டியதாயிற்று. ஸ்ரீகிருஷ்ணருக்கு இருமனைவிகள் உண்டு என்பதில் யாருக்கும் ஐயமிருக்காது. பல்மனைவிகள் எனக் கூறுவாருமுளர். இது எதனால் எனப்பார்ப்போம். களத்திரஸ்தானமாகிய ஏழில் சனி இருப்பதும், களத்திரகாரகனாகிய சுக்ரன் செவ்வாயுடனும், இராகுவுடனும் இணைந்ததே இதற்குச் சான்று. எனினும் அச்சுக்ரன் செவ்வாயிடமிருந்து சற்றுத் தள்ளி இருப்பதும் இராகுவினருகிலிருப்பதும், அவர் வெளிப் பார்வைக்கே மனைவிகளுடன் வாழ்ந்தார் என்றும், முற்றிலும் இந்திரியங்களை அடக்கி வென்றவர் என்பதும் திண்ணம்.

ஸ்ரீகிருஷ்ணருக்கு கேது தசை நடைபெற்றுக்கொண்டிருந்தபோது மகாபாரதப்போர் நிகழ்ந்தது. இது கி.மு. 3138 என்பது சரித்திர ஆராய்ச்சி வல்லுநர்களின் கணிப்பு. அப்போது ஸ்ரீகிருஷ்ணருக்கு சுமார் தொண்ணூறு வயது. மகாபாரதத்தில் ஸ்ரீகிருஷ்ணரின் பங்கு அளவிடற்கரியது. எல்லோராலும் பாராட்டப்படக்கூடியது. போற்றக்கூடியது. ஆயுதம் ஏந்தாமல், அர்ஜுனனின் தேரோட்டியாகி, பாண்டவர்களின் பக்கமிருந்து போரை வழிநடத்திச் சென்று, தனது அவதாரத்தின் முக்கிய காரணமாகிய நல்லவர்களையும் தர்மத்தையும் காக்கும் பணியை தான் எண்ணியபடியே நிறைவேற்றினார். கேதுவை ஞானகாரகன் மற்றும் மோட்சகாரகன் என்பர். அக்கேது கிருஷ்ணரின் ஜாதகத்தில் ஒன்பதில் வீற்றிருக்கிறார். ஒன்பதாம் வீட்டை தர்மஸ்தானம் என அழைக்கிறோம். எனவே இத்தசையில் சமாதான முறையில் தூது சென்றது, கீதோபதேசம் செய்தது எல்லாம் நிகழ்ந்தன.

அவரது வாழ்க்கையில் அடுத்து வந்த சுக்ரன், சூரியன் மற்றும் சந்திர தசைகள் அமைதியாகவே நடந்து முடிந்தன.

ஆனால் இரண்டாவது முறையாக வந்த செவ்வாய் தசையில்தான் யாதவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு மாண்டனர். இச்செவ்வாய் தசையில்தான் ஒரு வேடனின் அம்பு காலில் பட, தன் பூத உடலை விடுத்து வைகுந்தம் சென்றார். மாரகஸ்தானமாகிய ஏழாம் வீட்டிற்குரியவர் செவ்வாய். அவர் ஆயுள் ஸ்தானமாகிய எட்டாம் வீட்டிற்கு எட்டாகிய அதாவது மூன்றாம் வீட்டில் இராகுவுடன் இணைந்துள்ளார். இதுவே வேடனின் அம்பு காலில் பட்டு தன் அவதார காரியத்தை முடித்துக்கொள்ளக் காரணமாயிற்று.

அங்கிங்கெனாதபடி, எங்கும் ஏற்றமிகுபொருளாய் நிறைந்து, பிறப்பு இறப்பு இல்லாத பேரின்பநிலையருளும் கண்ணனின் பெருமையை யாரால் விளக்க இயலும். நமது பாரத பூமியில் பிறந்து நாமெல்லாம் உய்யும் பொருட்டு கீதையைத் தந்த அக்கண்ணனை கோகுலாஷ்டமியாகிய இந்நன்னாளில் போற்றி வழிபடுவது நமது பெரும் கடமையாகும்.

ஸ்ரீக்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்

(தொடர்கட்டுரை)

# பகவத் கீதை

## பதினோராம் அத்தியாயம்

## விஸ்வரூப தர்சன யோகம்

உமைப்ரியன்

**அர்ச்சுனன் கூறுவது:**

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ
ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன
வாபி ॥ (41)

யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோ
அஸி
விஹார சய்யாஸன
போஜனேஷு ।
ஏகோ அதவாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹம
ப்ரமேயம் ॥ (42)

"உன்னுடைய பெருமையை இத்தனை நாள அறிந்துகொள்ளாது, நணபன எனற உரிமையால் சிறிதும் யோசிக்காது, 'ஏ கிருஷ்ணா, ஏ யாதவா, ஏ கூட்டாளி' என்று சிறிதும் பணிவில்லாமல எவ்வாறெல்லாம் என்னால அழைக்கப்படடதோ, அச்சுதனே, (உனனுடன) விளையாடிய போதும் படுத்திருந்தபோதும், அமர்ந்திருந்தபோதும, தனித்தும, பிறருடைய எதிரிலும் ஏளனமாக எவ்வாறெல்லாம் அவமதிக்கப் பட்டீரோ அவற்றையெல்லாம் அளவில்லாத பெருமையும் ஆற்றலும் உடையவரே! மன்னித்திடுவீராக!"



[தன்னுடைய உறற நண்பனாக இதுவரை கருதியிருந்த கணணனைப் பற்றிய உண்மையறிவை அதாவது இறைவனைப்பற்றிய மெய்யறிவை பெற்றவுடன், அக்கண்ணன் மீது பகதி அர்ச்சுனனுக்கு உண்டாகிறது. முதிர்ந்த அறிவு, பரந்த அறிவு ஆகியவற்றின் விளைவே 'பக்தி' எனும் உணர்வாகும். அதாவது உலக உயிர்கள் யாவும் அவ் இறைவனின் மறுஉருவமே எனும் உயர்ந்த உணர்வே சிறந்த அறிவாகும். அந்த அறிவால்தான் 'அன்பு' எனும் உயர்பண்பு உருவாகும். இந்த அன்பே புனிதமாகும்போது 'பக்தி'யாக பரிமளிக்கிறது. அதனை அர்ச்சுன் இந்நிலையில் அனுபவிக்கிறுன்.]

**பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய**
**த்வமஸ்ய பூஜ்யஸ்ச**
**குருர்கரீயான் ।**
**ந த்வத்ஸமோ அஸ்த்யப்யதிக:**
**குதோ அன்யோ**
**லோகத்ரயே அப்யப்ரதி**
**மப்ரபாவ ॥ (43)**

"ஈடு இணையற்ற பெருமை உடையவரே! நகரும், நகரா உயிர்கள் வாழும் இந்த உலகத் திற்குத் தந்தை நீங்கள். வணங் குவதற்கும், குருவுக்கும் குருவா கவும் அமைந்தவர் தாங்கள். மூவுலகத்தில் உங்களுக்குச் சம மானவர்களோ, மிக்கவர்களோ யார் உளர் இங்கு? (யாரும் இல்லை)"

[ஈடு இணையற்ற, ஒப்பா ரும் மிக்காரும் இல்லாத தெய் வமாக கிருஷ்ண பகவான் வணங்கப்படுகிறார். மூவர்க் கும் முதல்வனாக பகவான் தொழப்பெறுகிறார். அதனால் தான் உலக இயக்கம் சீராக நடைபெறுவதாக மறைமுகமாக செய்யுளில் குறிக்கப்படுகிறது. 'கட்சி'க்கு ஒரு தலைவன் இருந் தால்தான் கட்சியிலோ, அக்கட் டியால் ஆளப்படும் நிருவா கத்திலோ குழப்பமோ, பிரச்ச னையோ ஏற்படாது. அந்த வகையில் ஆக்கம், அளித்தல், அழித்தல் யாவும் கண்ணனின் திருவருளால் சீராக நடைபெறு கிறது.]

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய
காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீச
மீட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய ப்ரியாயார்ஹஸி
தேவ ஸோடும் ।। (44)

"ஆகவே, தேவனே, என் உடம்பு தரையில் தொட (என்னால்) வணங்கப்படக்கூடிய போற் றுதற்குரிய ஈசனாகிய உன் னருளை பெற வேண்டுகின் றேன். பிள்ளைக்குத் தந்தையா கவும், நண்பனுக்கு நண்பனாக வும், காதலிக்கு காதலனாகவும் அமைந்து (என் குற்றங்களை) பொறுத்தருள்வீராகுக!"

[ஒரு வன் தலைகுனிந்து, கைகுவித் துத் தொழும்போது அவனது பணிவு தெரியவரும். அதே நேரத்து எதிர் நபரின் கால் கள் மட்டும் தெரியவர ஒருவ னது அங்கம் யாவும் தரையில் சேர்ந்து தொழுதிடும் போது அவனது, தன்னை முழு மையாக ஒப்புவித்திடும் 'சரணா கதி' உயர்பணிவுநிலை தெரி யவரும். இறைவனைப் பற் றிய உண்மை அறிவை பெற்ற வுடன், தன்னையே தன் உணர் வுகளையே இறைவனுக்கு அர்ப் பணித்த விடுகிறான் அர்ச்சு னன். இங்கு அன்புப்பிணைப் பின் மூன்று நிலைகள் கூறப்ப டுகின்றன. தந்தைக்கும் பிள் ளைக்கும் உள்ள அன்பு-பாசம் சிதைக்கப்பட்டாலும், குறைவு பட்டாலும் அவை அற்றுப் போகாது. இருவர் உள்ளங்க ளின் அடித்தளத்தில் அவ்வு ணர்வுகள் உறைந்துதான் இருக் கும். ஆகவே இருவர்க்குமி டையே நிலவும் குற்றங் குறை கள் கண்டிப்பாக மன்னிக்கப்பட் டதாகவே, மறக்கப்பட்டதாகவே அமையும். அடுத்தது நட்பு. தியாகம் எனும் உயர் உணர் வில் அவர்களுக்கிடையே நில வும் குற்றங்குறைகள் அடிப்பட் டுப்போகும். மூன்றாவது காத லன் - காதலி உறவு. முன்னிரு வரின் அன்பு, தியாகம், ஆகி யன பாசத்தின், நட்பின் கட் டாயமாக அமைந்தபோது, பாச மும் நட்பும் மீறிய ஓர் இனிமை யான உணர்வில் காதல் திகழ் கின்றது. இக்காதலுணர்வில் குற்றங்கள் குறைகள் தெரி வதே இல்லை. இந்த மூன்று நிலையில் விளங்கும் இணக்கத் தையே அர்ச்சுனன் பகவானி டம் கொண்டிருந்தான்.]

அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோ
அஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம்
மனோ மே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்
நிவாஸ ।। (45)

"தேவா, முன்பு எப்போதும் பார்த்திடாத ஒன்றை இப் போது பார்த்து மகிழ்ந்தவ னாக உள்ளேன். ஆனா லும் எனது மனம் பயத்தால் நடுங்குகிறது. முன்பு எனக்குக் காட்டிய அந்த உருவத்தையே எனக்குக்காட்டுவாயாக! தேவதே வனே! உலகிற்லெல்லாம் இருப் பிடமாக, திகழ்பவனே! எனக்கு (நான் வேண்டியபடி) அருள் புரி வீராக!"

[மீனுக்கு வாழ்விடம் நீர்நிலை தான். ஆனால் அந்த நீர்நிலை களே கொந்தளிக்கும் வகை யில் நிகழ்ந்தால், அந்த மீனுக்கு அச்சமேற்படுவது இயற்கையே. தெளிந்த நீர்நிலைகளைத்தான் அந்த மீனும் எதிர்பார்க்கின் றது. அங்குதான் அமை தியை அனுபவிக்கின்றது.

## நம்மாழ்வாரைப் பற்றியே கூறும் நூல்கள்

கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆசாரிய ஹ்ருதயம், பாதுகா ஸஹஸ்ரம், திரவிடோ உபநிஷத் ரத்நாவளி, சடகோபர் அந்தாதி, மாறன் அலங்காரம், மாறன் அகப்பொருள், மாறன் கோவை, மாறன் யமக அந்தாதி, ஆழ்வார் அனுபூதி, சடகோப ஸஹஸ்ரம், திருவாய்மொழி கலம்பம்.

திரு. இல. ஹரிவல்லபை - சேடப்பாளையம்.

# ஆர்ஜித சேவை விவரங்கள்
## தினசரி சேவைகள்

| சேவை | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப் படும் நபர்கள் எண்ணிக்கை | அனுமதிக்கப் படும் நேரம் (மாறக்கூடியது) |
|---|---|---|---|
| 1. சுப்ரபாத தரிசனம் | 100/- | 1 | காலை 2-30 மணி |
| 2. தோமால சேவை | 200/- | 1 | காலை 3-30 மணி |
| 3. அர்ச்சனை | 200/- | 1 | காலை 4-30 மணி |
| 4. தோமால சேவை மற்றும் அர்ச்சனை (வெள்ளிக் கிழமைகளில்) | 400/- | 1 | காலை 6-30 மணி |
| 5. அமந்த்ரஞோத்ஸவம் | | | |
| வெள்ளிக்கிழமைகளில் | 600/- | 1 | காலை 6-30 மணி |
| மற்றைய நாட்களில் | 600/- | 1 | காலை 3-30 மணி |
| 6. நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைதோறும்) | 100/- | 1 | காலை 5-30 மணி |
| 7. சிறப்பு நுழைவு சீட்டு | 30/- | 1 | சர்வ தரிசன அனுமதியின் போது |
| 8. ஏகாந்த சேவை | 100/- | 1 | இரவு 10-30 மணிக்குப்பிறகு |

குறிப்பு:-

1) வரிசை எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்துகொள்ளலாம்.
2) சிறப்பு நுழைவு மற்றும் ஏகாந்த சேவை சீட்டுக்களுக்கு முன்பதிவு கிடையாது.
3) ஏகாந்த சேவைகளுக்கான சீட்டுகள் ஸர்வ தரிசனத்திற்குப் பிறகு இரவு 10-30 மணிக்குமேல், ஒதுக்கப்படும் சீட்டுக்களைப் பொறுத்து விற்கப்படும்.

## உதயாஸ்தமான ஸர்வ சேவா அறக்கொடை திட்டம்

| | நன்கொடை ரூ. |
|---|---|
| வெள்ளிக்கிழமை தவிர்த்து மற்றைய எந்த நாளாயினும் | 1,00,000/- |
| வெள்ளிக்கிழமைகளில் | 3,00,000/- |

நன்கொடையாளரைச் சார்ந்தவர்கள் (மொத்தம் 6 நபர்கள்) காலை சுப்ரபாதம் முதற்கொண்டு ஏகாந்த சேவை வரையிலான எல்லா சேவைகளுக்கும் குறிப்பிட்ட நாளன்று அனுமதிக்கப்படுவர். அன்று நடைபெறும். மற்றைய ஆர்ஜித சேவைகளை கண்டு களிக்கவும் அனுமதிக்கப்படுவர்.

அன்பளிப்பு : ஒவ்வொரு ஆண்டும் ஒரு கல்யாணோத்ஸவ வஸ்த்ரம், 25 லட்டுகள், 5 வடைகள் வழங்கப்படும்.

அதேபோலத்தான் போர்க்களத்தில் தனக்கு ஏற்பட்ட மன மயக்கத்தை, இறைவனது விஸ்வரூப தர்சனம் தீர்த்துவைத்திட்டாலும், அந்த நெடிய அச்சம் தரும் உருவத்தை, என்றும் அமைதியும் அன்பையும் எதிர்பார்க்கும் அர்ச்சுனன் தொடர்ந்து பாரத்திட விரும்பவில்லை. ஆகவே இறைவனை அவருடைய 'அன்பு' உருவத்திலேயே காண விரும்பினான்.]

கிரீடினம் கதினம் சக்ரஹஸ்த
மிச்சாமி த்வாம் த்ருஷ்டுமஹம் ததைவ ।
தேனைவ ரூபே ண சதுர்ப்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வ-மூர்த்தே ॥ (46)

"நான் உங்களை முன்பு போலவே மகுடமும், கதையும், கையில் சக்கரமும் கொண்டவராகவே காண விரும்புகின்றேன். ஆயிரம் கைகளையுடைய உலகநாதனே! நான்கு திருக்கைகளுடன் கூடிய உருவத்தையே காட்டியருள்வீராக.

[மனிதனிடமிருந்து சற்றே மாறுபட்டு காட்டும் வகையில் தெய்வங்களுக்கு ஒரு சில உருவமைதிகளை சமய இலக்கியங்கள் அல்லது சிற்ப வேலைப்பாடுகள் கொண்டு விளங்கும். இது தெய்வங்களில் தெய்வீக ஆற்றலைக்காட்டுவனாக அமையும். கண்ணனின் மனித வடிவத்தில் நான்கு கைகளை காட்டுவதன் மூலம் இறைவனின் தெய்வ நிலையும் குறிக்கப்படுகிறது. அதனையே அர்ச்சுனன், மனித இனத்தின் சார்பில் ஒரு கோரிக்கையாக வைத்து வேண்டுகிறான்.]

(தொடரும்)

★★★★★★★★★

# மூலாதாரமும் த்வாத சாந்தமும்

"தேஜஸ்வி" - திருவாரூர்.

முன் குறிப்பு :

வைணவர்களுக்குக் கோயில் என்பது திருமலை திருப்பதியா கும. பெரிய கோயில் என் பது ஸ்ரீரங்கம். அது போன்று சைவர்களுக்குக் கோயில் சிதம் பரமும், பெரிய கோவில் என் ருல் திருவாரூர் ஸ்ரீதியாக ராஜ ஸ்வாமி கோவிலும்தான். கோயில் சுற்றளவு ஐந்து வேலி, குளமாகிய கமலாலயம் ஐந்து வேலி. செங்கழுநீர் குளமும் ஐந்து வேலியாகும்.

திருவாரூர்த் தேர் நகர்ந்தால் நம் வாழ்க்கை தேர் நகரும். இங்கே தேர்நிலைக்கு வந்தால் நம் வாழ்வும் நிலையான வளம் பெரும். கங்கையெனப் பெருகி நிற்கும் கமலாலயம்; அதன் கரையில் காசி போன்று 64 ஸ்நான கட்டங்கள் - 64 சக்தி க்ஷேத்திரங்களில் முதன்மை யான கமலை பராசக்தி கொலு வீற்றிருக்கும் பெரிய க்ஷேத்திரம். ஸ்தல விருக்ஷம் பாதிரி. இக் கோயில் பூங்கோவில் எனப்ப டும்.

தேவர்கள் குழுமி நிற் கும் ஆயிரங்கால் மண்டபமா கிய தேவாகிரிய மண்டபம் பல சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. கலைப் பொக்கி ஷம் இது. சைவ சமயக்குர வர்களில் ஒருவரான சுந்தரர் திருத்தொண்டர் தொகை பாடிய இடம். அதனால் தியாகேசரும், சுந்தரருக்காகப் பறவை நாச்சி யாருக்காக இருமுறை தூது போனது பெரும் அதிசயம். அப்பரும், சம்பந்தரும் தேவா ரம பாடியருளிய பொற்கோ வில. ஸ்ரீமுத்துஸ்வாமி திக்ஷி தர் கமலாம்பிகா நவார்ணவ கீர்த்தனைகள் பாடியதும் இங் கேதான்.

ஆறுபடை வீட்டையும் பஞ்ச பூதங்களையும் ஒருங்கே கொண் டது. பூலோக கைலாசமும் இதுவே. இங்கே விபூதியே திரு மந்திரமாம்!

ஆதிசங்கரரின் ஷண்மத ஸ்தாபனத்திற்கிணங்க ஆறு முக்கிய தெய்வங்களும் உறை யுமிடம். சங்கீத மும்மூர்த்திகள் அவதரித்தத் தலம்.

மஹாலக்ஷ்மியும், கமலை பரா சக்தியும் தவம் செய்யும் இடம். மஹாவிஷ்ணுவின் திருமார்பிலே தியாகராஜமூர்த்தி சோமஸ்கந்தராய் அஜபை நட னக்காட்சி வழங்கும் திருத்த லம். ஸ்ரீமஹாவிஷ்ணும் வெங்க டேஸ்வரராக நின்ற கோலத்தில் கர்ப்பகிருஹத்தின் பின் பக்கம் காட்சி தருகிருர்.

அகிலாண்ட கோடி பிரம் மாண்டங்களுக்கு சக்ரவர்த்தி யும், ஆருயிர்கள் அனைத்திற் கும் பதியும் எங்கும் பரவியுள்ள விராட் புருஷனான மஹாவிஷ் ணுவின் திருமார்பிலே அவரு டைய மூச்சுக்காற்ருகிய 'ஹம்ஸ, ஸோகம்' - என்ற அஜ பைக்கு இணங்க தாண்டவமி டும் சித்சபேசனாகிய பரமேஸ் வரன் தனது சக்திகளாகிய கமலாம்பிகையுடனும் (யோக சக்தி) நீலோத்பலாம்பிகையுட னும் (போக சக்தி) உயிர் கள் யாவும் உய்யும் பொருட்டு ஸோமாஸ்கந்த சிவமாய், தியா கராஜ மூர்த்தியாய், அயிராவ ணம் ஏறி அமரர் நாடு ஆளாது ஆனேர் ஏறி (தேவர் உலகை ஆளாது விட்டு பசுவேறி) திரு வாரூர் பூங்கோயில் அமர்ந்து ஈரேழு உலகங்களையும் பரிபா லித்து வருகிருர்.

இந்த தியாகராஜமூர்த்தி எப் படி இருக்கிருர்?

ஆயிரம் தாமரை போலும்
ஆயிரம் சேவடியானும்;
ஆயிரம் பொன் வரை போலும்
ஆயிரம் தோளுடையானும்;
ஆயிரம் ஞாயிறு போலும்
ஆயிரம் பேரு கந்தானும்,
ஆரூர் அமர்ந்த அம்மானே

என்றும்

முன்னம் அவனுடைய நாமம்
கேட்டாள்;
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம்
கேட்டாள்;
பின்னை அவனுடைய ஆரூர்
கேட்டாள்;
பெயர்த்து அவனுக்கே பிச்சியானாள்-
அன்னையையும் அத்தனையும்
அன்றே நீத்தாள்-
அகன்ருள் அகலிடத்தார் ஆசாரத்தை-
தன்னை மறந்தாள்; தன்னாமங்
கேட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன்
தாளே

என்றும் வாகீசர் பாடி இன்பு றுகிருர் - பரவசமடைகிருர்.

இன்னத்தன்மையன் என்றுரைக்க இயலாத மூர்த்தி, திருவாரூர் தொன்னகரில் வீற்றிருக்கும் மூர்த்தி.

திருவாரூர் கோயில் திருமூலட்டானம் எனவும், பூங்கோயில் எனவும் மணம் பரப்புகிறது.

இம்மூலமூர்த்தியாகிய பரமசிவம், சிவசக்தியாகி எப்பொழுது ஆரூர் வந்தது.? என்பதற்கு முயன்று திருத்தாண்டகச் செய்யும் பத்திலும் முறையே-

ஒருவனாய் உலகத்தே நின்ற நாளோ;
ஒருருவே மூவுருமான நாளோ?
கருவனாய் காலனை முன் காய்ந்த
நாளோ? காமனையும்
கண்ணழலால் விழித்த நாளோ?
மான்மறிக்கை
ஏந்தியோர் மாதோர் பாகந்திருவினான்
சேர்வதற்கு முன்னோ? பின்னோ?
சிலையால் முப்புரமெரித்ததற்கு
முன்னே, பின்னோ? தில்லை -
மணிதிகழும் அம்பலத்தே
மன்னிக்கூத்தை ஆடுவான்
புகுவதற்கு முன்னோ, பின்னோ?
அறம்பலவும் உரைப்பதற்கு முன்னோ,
பின்னோ? வேதத்தை
வரிப்பதற்கு முன்னோ, பின்னோ?
அணியாரூர் கோயிலாகக்கொண்ட
நாளே!

என்றெல்லாம் நமக்குணர்த்தித் திருவாரூர் திருமூலட்டானம் மூலாதார க்ஷேத்திரம் என்று சொல்லாமல் சொல்கிறார் அப்பர்.

சக்தி

யும் சிவமும் ஒன்றே. ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து இருப்பதுமில்லை. உயிர் பிரிந்து விட்டால் சிவம் (ஜீவன்) போய் விட்டது என்றும், சக்தி போய் விட்டது அதனால் சவமானான் (சிவம்) என்றும் தவறுதலாக உணர்கிறோம். சக்தியே, உயிர, உயிரே சிவம். சிவசக்தியே உயிரும் உடலும்.

சிவசக்தியாகிய தியாகராஜ சிவம் ஒருபொழுதும் சக்தியை பிரிந்து இருப்பது இல்லை என்பதால் யோக சக்தியுடனும் போக சக்தியுடனும் இங்கே உள்ளார்.

மற்றும நமது உயிரோடு கூடிய உடலும் கோவில்தான் என்கிறார் திருமூலர். இங்கேயும் சிவசக்தி உறைகிறது.

நமது சரீரத்திலே ஆறு ஆதாரங்களும் த்வாதசாந்தமும் உள்ளன. திருவாரூர் கோவிலிலும் உள்ளன.

நமது சரீரத்தின்

(1) மூலாதாரத்திலே - குண்டலினி சக்தியும் கணபதியும் - இது நான்கு இதழ்களுடன் கூடிய கமலம்

(2) சுவாதிஷ்டானம் - பிரும்மாவும், சரஸ்வதியும் - இது ஆறு இதழ் கமலத்துடன் கூடியது.

(3) மணி பூரகம் - விஷ்ணுவும் லக்ஷ்மியும். இது நாபிக்கமலத்தில் மூன்றும்பிறை வடிவில் பத்து இதழ்களுடன் கூடியது.

(4) அநாகதம் என்ற இருதய கமலம் - இது முக்கோண வடிவில் பன்னிரண்டு இதழ்களுடன் கூடியது. இங்கே ருத்திரன் ருத்திரை எனும் சக்தியுடன் கூடியும் முருகனுடன் (ஸகந்தமூர்த்தி) கூடியும் இருக்கிறார். இதுவே குகாலய கமலம்.

(5) விசுத்தி - இங்கே மகேசுவரன், மகேசுவரி. இது ஆறு கோணத்தில் பதினாறு இதழ்களுடன் கூடிய கமலம்.

(6) ஆஞ்சை - சதாசிவன். இங்கே மனோன்மணியுடன் கூடி உள்ளார். இரு புருவ மத்தியில் வட்டவடிவில் மூன்று இதழ் கமலத்துடன் கூடியது.

இவ்வாறு ஆறு ஆதாரத்திற்கும் மேலாக ஏழாவதாகிய துவாதசாந்த ஸருவெளி பிரம்ம ரந்திரம் மேலே 1008 இதழ்களுடன் ஆயிரம் கோடி சூரிய பிரகாசமாய் உள்ளது. இங்கு பரமசிவம் பராசக்தியுடன் கூடி சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார். இவரே சிவராஜன் எனப்படும் கமல வஸந்த தியாகராஜர்.

முன்சொன்ன ஆறு ஆதாரங்களும் த்வாத சாந்தமும் திருவாரூர் பூங்கோயிலினுள் உள்ளன.

(1) மூலாதார கணபதி குண்டலினி சக்தியுடன்.

(2) பிரம்மாவும் சரஸ்வதியும் சுவாதிஷ்டானத்தில். (இது மறைமுகமாக உள்ளது.)

(3) மணி பூரகம் - மஹாவிஷ்ணுவும், லக்ஷ்மியும் (திருமூலட்டானத்தின் பின்புறம்)

(4) அநாகதம் - தியாக ராஜமூர்த்தி சோமாஸ்கந்தராய் உமையுடனும் கந்தனுடனும் கூடி இருப்பது.

(5) விசுத்தி - நீலோத்பலாம் பிகையும் மகேசுவரனுடன் கூடி இருப்பது.

(6) ஆஞ்ஞை - மனோன்மணி என்று குறிப்பிடப்படும் கமலை பராசக்தி உறையும் இடமாகிய சதாசிவ பீடமாகிய கோயினுள் கமலாம்பாள் தியாகராஜ சிவத்துடன் கூடி இருப்பது.

(7) ஏழாமிடமாகிய த்வாத சாந்த பெருவெளியாகிய கமலையின் சஹஸ்ர கமல பீடத்தில்

யோகத்துடன் கூடி உறைகிறாள் கமலாம்பிகை அன்னை சிவராஜருடன்.

அதுபற்றியே உயிர்களாகிய பசுக்கள், பாசமாகிய ஞான அறிவை யோகத்தில் ஊன்றி குண்டலியில் சக்தியை எழுப்பி இடகலை பிங்கலை என்ற நாடிகளின் வழியே சுழுமுனை நாடியில் விளங்கும் கபாலத்தில் ஏற்றி ஆஜ்ஞையை ஜெயித்து பிர்ம்மரந்திரத்தில் மோதி அமிர்தம் பெற்று பதியாகிய பரம சிவத்துடனும் பராசக்தியுடனும் சிவராஜ யோக சமாதியில் ஆடுகின்றனர்.

ஆகவே-

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள் முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள். பின்பு சிவயோகமே சிவ போகமென்று உணர்வார்கள். சாலோக்ய, சாமீப, சாரூப, சாயுச்சியம் பெற்று தொன்றுதொட்டு வரும் பிறப்பு இறப்புகளாகிய தளை நீங்கப்பெற்று பரமகதி எனும் மோக்ஷநிலையெய்துகின்றனர்.

திருவாரூரே யோக பூமி; ஞானபூமி, மோக்ஷ பூமி; தியாக பூமி; ஸ்வர்க்கபூமியுமாம். விராட்புருஷனின் இதய கமலம்.

ஆதிசங்கரர் பகவத்பாதர் அவர்களும் தனது ஸௌந்தர்ய லஹரியில் (ஆதிசங்கரர் கயிலை மலையில் மதிற்சுவரில் பொறிக்கபெற்றிருந்த சுலோகங்களை எடுத்து வந்து பிரபலபடுத்தினர் என்பர்) கீழே கண்ட சுலோகங்களில் கூறியது:

ஸுதா ஸிந்தோர் மத்யே
ஸுரவிடபிவாடீ பரிவ்ருதே
மணித்வீபே நீபோபவனவதி
சிந்தாமணி க்ருஹே!
சிவாகாரே மஞ்சே பரமசிவ
பர்யங்க நிலையாம்
பஜந்தி த்வாம் தன்யா: கதிசின
சிதானந்தலஹரீம்!

(ஸௌந்தர்யலஹரி ஸ்லோகம்-8)

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே
ஹுதவஹம்
ஸ்த்திதம் ஸ்வாதிஷ்ட்டானே ஹ்ருதி
மருத்தமுகாச முபரி!
மனோஅபிரூமத்யே ஸகலமபி
பித்வாகுலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹரஹஸி
பத்யா விஹரஸே!

(ஸௌந்தர்யலஹரி ஸ்லோகம்-9)

8-வது சுலோக வர்ணனை: இது பராசக்தியின் சிந்தாமணி க்ருஹத்தைப் பற்றியது. இந்த சிந்தாமணி வீடு ஸகல பிரும்மாண்டங்களுக்கும் அப்பால் அமிர்த சாகரத்திற்கும் நடுவில் ரத்தின தீவில் உள்ளது. அந்த ரத்னத் தீவில் கதம்ப மரங்கள் நிறைந்த உத்தியான வனத்துடன் கூடிய சிந்தாமணி க்ருஹத்தில் பரம மங்கள வடிவமான சிம்மாஸனத்தில் பரமசிவனுடைய மடியில் வீற்றிருக்கும் ஞானானந்தக் கடலில் அலை போன்றவள் பராசக்தி.

இந்த சுலோகத்திற்கு இணங்க கமலாம்பிகை சந்நிதி கட்டப்பட்டுள்ளது. மேலும் க-கலைமகள், ம-மலைமகள், ல-அலைமகள் ஆகிய மூவரையும் குறிக்கும் கமலா என்பது. இச் சந்நிதியில் பதுமநிதி, சங்கநிதியும் உள்ளன.

கமலை மும்மூர்த்தி வடிவினள். கமலாம்பிகை தான் வேறு சிவம் வேறு அல்ல என்பதற்கிணங்க தியாகராஜ மூர்த்தியாக கங்கையையும், நிலவையும் தலையில் சூடியிருக்கின்றாள். யோகத்தில் இருப்பதால் முகமண்டலம் ஆயிரம் இதழ் தாமரையுடன் கூடியிருக்கிறது. யோகத்தில் தன்னை பூஜிப்பவர்களுக்கு அவளின் இடது காலைக் குறிக்கும் அபர ஞானத்திற்கும் மேலாம் வலது கரலில் பரஞானம் (ஸ்ரீவித்யை எனும் பரஞானம்) தருவதாகத் தன் கடைக்கண்களால் (மீன் போன்ற கண்கள் - மீன் தன் கண்களாலேயே குஞ்சுகளை பராமரிக்கும் இயல்புடையது.) அறிவித்து வலது கையில் உள்ள மலரால் (நீலோத்பலம்) சாயுச்சியமாகிய மோக்ஷத்தையும் தருகிறாள். மீன் சின்னம் முன் மண்டபத்தில் இதை குறிப்பிடும் வகையில் பாண்டிய மன்னர்களால் குறிக்கப்பெற்றுள்ளது. இவளே மீனாக்ஷி, விசாலாக்ஷி, காமாக்ஷியுமாம். நீலாயதாக்ஷியும் இவளே.

ஒன்பதாம் சுலோக வர்ணனை: நவாபரணங்களுடன் கூடிய ஸ்ரீசக்கரத்தில் (ஸ்ரீசக்கர மஹிமையும் பூஜையையும் ஒரு குருவை அடைந்து உபதேசம் பெற்று தெரிந்து கொள்ள வேண்டும்.) சர்வானாந்த மயம் எனும் பிந்து பீடத்தில் பஞ்ச பிர்ம்மாஸனத்தில் சதாசிவனுடன் மஹா த்ரிபுரசுந்தரி எழுந்தருளியிருக்கிறாள் என்பதாகும். ஹாடகேசுவரம் என்பது இதை உணர்த்துகிறது.

மற்றும் - மூலாதாரத்தில் பிருதிவீ தத்துவத்தையும், மணிபூரகத்தில் ஜலத் தத்துவத்தையும், சுவாதிட்டானத்தில் அக்னி தத்துவத்தையும், அனாகதத்தில் வாயு தத்துவத்தையும், அதற்கு மேல் விசுத்தியில்

ஆகாச தத்துவத்தையும் ஆஞ்ஞையாகிய புருவ மத்தியில் மனஸ் தத்துவத்தையும் இவ்வாறாக சுஷும்னா நாடி மார்க்கத்திலுள்ள எல்லா சக்கரங்களையும் ஊடுருவி சென்று ஆயிரம் இதழ் கொண்ட கமலத்தில் ரகசியமான இடத்தில் பதியாகிய சதாசிவனுடன் கூடி மகிழ்கிறாள் என்பதே.

மூலாதாரத்திலிருந்து எழுந்த குண்டலியாகிய பராசக்தி சுவாதிஷ்டானத்தைக் கடந்ததும் மணிபூரகத்தில் பிரத்தியக்ஷமாகிறாள். அங்கே அர்க்கியம், பாத்தியம் முதல் பூஷணம் வரை உபசாரங்கள் செய்து அநாகதத்திற்கு அழைத்து வந்து அங்கே பராசக்தியை சிம்ஹாஸனத்தில் இருக்கச் செய்து சந்திர கலாரூபமான ஸ்படிக மணிகளால் பூஜித்து ஆஞ்ஞா சக்கரத்திற்கு அழைத்து நீராஜனம் செய்து ஸஹஸ்ராரத்தின் நடுவில் இருக்கும் சந்திர மண்டலத்தில் சதாசிவனுக்கு பக்கத்தில் சேர்ந்து இருந்துகொண்டு அவர்களைச் சுற்றி படுதாவை போட்டுத் தான் சமீபத்தில் இருந்து கொண்டு அம்பாள் மூலாதாரத்திற்குத் திரும்பும் சமயம் எதிர்பார்த்துக்கொண்டு இருத்தல் வேண்டும். தியாகராஜ சுவாமி சந்நிதியில் இதை அனுபவிக்கலாம்.

பத்தாவது ஸ்லோகத்தில் அம்பாள் மூலதாரம் திரும்புவது வர்ணிக்கப்படுகிறது.

தேவியின் சரண கமலங்கள் இரண்டிலிருந்து பெருகும் அமிருததாரை பக்தர்களாகிய நம்மை சிறந்த புத்தியுடையவர்களாக்கும் மற்றும் சாயுச்சியத்தையும் நல்கும்.

அடுத்தபடியாக திருவாரூர் - இந்து மதத்தின் கண்ணாகிய ஷண்மத ஸ்தாபனங்களை விளக்கும் க்ஷேத்ரமாகும். எதனால்? சூரியன், அம்பிகை, விஷ்ணு, கணபதி, மஹேஸசுவரன், குமரக கடவுள் யாவரும் விற்றிருக்கும் பேரூர். ஆறுபடை வீடுகளும் இங்கே அடங்கியிருப்பதால் இது கந்தபுரம் என்றும், லக்ஷ்மி இருபபதால் ஸ்ரீபுரம் என்றும், கமலை இருப்பதால சக்திபுரம் என்றும், பரமசிவம் உறைவதால் அந்தரகேச்வரபுரம் என்றும் பலவாறாகப் புகழப்பட்டுள்ளது. ஹாடகேசுவரம் என்பது இதை உணர்த்துகிறது.

இது பஞ்சபூத தலங்களுள் பிருத்வி என்பர். ஆயினும் பஞ்ச பூதஸ்தலங்களுக்கும் மேலானது. ஏனெனில் ப்ருத்வீ என்பது காஞ்சிபுரத்தை குறிக்கும். இங்கே ஆகாசமாகிய சிதம்பரமும், வாயு ஸ்தலமாகிய காளஹஸ்தியும், தேயுஸ்தலமாகிய திருவண்ணமலையும், அப்பு ஸ்தலமாகிய திருவானைக்காவையும் பிருத்வி ஸ்தலமாகிய காஞ்சிபுரத்தையும் உள்ளடக்கியதால் திருவாரூர் எனப் படுவது. அதாவது ஐந்தையும் உள்ளடக்கிய ஆறாவது தலம்.

64 சக்தி பீடங்களுள் முதன்மையானது. இங்கே யோக பீடமும் அக்ஷரப் பீடமும் உள்ளன. எல்லாவற்றிற்கும் மேலாக 32 அறங்களையும் இங்கே குறிக்கும் வண்ணம் நீலோத்பலாம்பிகை சந்நிதி அமைந்துள்ளது. குழந்தையாக முருகனை (கந்தனை) கையில் பிடித்திருப்பதால் இங்கே வருவோர் மகப்பேறும் அடைவர் சந்தேகமில்லை. நீலோத்பலாம்பிகையை தினம் காலை நான்கு முறை பிரதக்ஷிணம் ஒரு மண்டலம் செய்தால் சந்தான பாக்கியம் நிச்சயமே. சம்ஸயம் வேண்டாம்.

கமலாலயம் எனும் தீர்த்தம் அமைந்த குளம் மிகவும் அகலமும நீளமும் உடையது. மிக அழகு வாய்ந்தது. வேறு எங்கும் இதுபோன்ற குளம் இல்லை. இங்கே லக்ஷ்மி இருப்பதால் பாற்கடல் எனவும், பராசக்தி இருப்பதால் அமிருத சாகரம் எனவும், சரஸ்வதி உறைவதால் பிர்ம்மஸாகரம் எனவும் வழங்கப்பெறும். காசியில் உள்ள 64 கட்டங்களும் இத்தீர்த்தக்கரையிலுள்ளன. ஆகவே இது கங்கையாம்.

இத்தலத்தில் வேறு எங்கும் நடைபெறாத அர்ச்சனைகள் இரண்டு நடைபெறும். 1) முகுந்த அர்ச்சனை 2) முசுகுந்த அர்ச்சனை.

ஆரூரில் பிறந்தவர்கள் சிவகணங்கள் எனவும், இங்கே 10 மாதம் தங்கி தியாகராஜரையும், விடங்கரையும், கமலை பராசக்தியையும், வன்மீகநாதரையும் கமலாலயத்தில் ஸ்நானம் செய்து தரிசித்தால் இம்மைக்குப் பொருளும் மறுமைக்கு வீடும் கிடைக்கும்.

## கர்மங்கள் மூன்று

1) **ப்ராரப்த கர்மம்**
அநப்யுகதம்
(பலனளிக்கத் தொடங்கியது)
அநப்யுகதம்
(பலனளிக்காதது)

2) **சஞ்சிதம்**
(சேர்த்து வைத்திருக்கும் பாவம்)

3) **ஆகாமியம்.**
(இந்தப் பிறவி எடுத்தபின் செய்த பாவங்கள்)

சதயன் - காஞ்சிபுரம்.

# ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம்

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.



1. (விளக்கவுரை) ஸுப்ரபாதத்தை முடித்து ஸ்தோத்ரத்தைத் தொடங்குகிறார் ப்ரதிவாதிபயங்கம் அண்ணா ஸ்தோத்ரமென்பது குணிநிஷ்டகுணாபிதானம் என்பர். அதாவது இங்கு குணக்கடலான எம்பெருமானிடமுள்ள குணங்களில் சிலவற்றை முடிந்தவரையில் சொல்லுப் புகழ்தலாகும். ஆக இவ்வாசிரியர் தம்மைக் காத்தற்கு உறுப்பான எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லுப் புகழ்ந்து, தமக்கு அநிஷ்டமான பாபங்களைப் போக்கித் தமக்கு இஷ்டமான பலனைத் தரவேண்டுமென்று இதன்மூலமாக ப்ரார்த்திக்கிறார்.

கமலாகுச சூசுககுங்குமதோ நியதா
ருணிதா துலநீலதநோ ।
கமலாயதலோசந லோகபதே
விஜயீபவ வேங்கடசைலபதே ।। (1)

(பதவுரை) கமலாகுச சூசுக குங்குமத: = ஸ்ரீமகாலக்ஷ்மியின் திருநகில் நுனிகளிலுள்ள குங்குமப்பூவின் குழம்பினால், நியத அருணித அதுல நீலதநோ = எப்போதும் சிவந்துள்ள நிகரில்லாத நீலமேனியனே; கமல ஆயத லோசன = தாமரையிதழ் போல் நீண்ட திருக்கண்களையுடையவனே, லோக பதே = உலகங்குட்கு நாதநே; வேங்கட சைலபதே = திருவேங்கடமைல நாயகனே, விஜயீபவ = (நீ) வெற்றி பெறுமவனாகுக.

(கருத்து) இயற்கையாய் நீல மேகம் போல் கறுத்தும் திருமகளின் திருமார்பில் சாத்திய குங்குமச் சாற்றின் சேர்க்கையால் எப்போதும் சிவந்தும் இருக்கிற திருமேனியழகையும் தாமரைக் கண்களையும் கண்டவாறே இவனே லோகநாதன் என்று எல்லோராலும் அறியப்படும் திருவேங்கடமுடையானே, நீ வெற்றிபெறக்கடவாய்.

1. (விளக்கவுரை) திருமகளின் ஆலிங்கனத்தினால் மகிழ்ந்து திருக்கண்கள் தாமரைபோல் மலரப்பெற்றுத் தான் காப்பாற்ற வேண்டிய லோகத்தைக் கடாக்ஷித்துக் காப்பாற்றுகிறான் திருவேங்கடமுடையானென்பது முதல் ச்லோகத்தின் கருத்து.

முதல் விளியினால் ச்ரிய:பதித்வமும், இரண்டாவதனால் புண்டரீகாக்ஷத்வமும், உலகத்தைக் காப்பவனென்னும் பொருள் கொண்ட லோகபதே என்ற மூன்றாவது விளி

ஸ்ருஷ்டி ப்ரளயாதிகளுக்கும் உப லக்ஷணமாய் அதனால் ஜகஜ் ஜந்மாதிகாரணத்வமும் கூறப் பட்டன. இவையல்லவோ பரப்ரஹ்மத்தின் லக்ஷணங்கள். ஏவஞ்ச ப்ரஹ்மமான ஸ்ரீமந் நாராயணனே திருவேங்கடமுடை யனென்றதாயிற்று. அவனைப் பார்த்து நீ மேம்பட்டு விளங் குவேணுமென்கிறார்.

ஸசதுர்முகஷண்முக பஞ்சமுக
ப்ரமுகாகிலதைவதமௌளிமணே ।
சரணாகதவத்ஸல ஸாரநிதே
பரிபாலயமாம் வ்ருஷசைலபதே ।। (2)

(ப.) ஸசதுர்முகஷண்முக பஞ் சமுக அகிலதைவதமௌளி மணே = நான்முகனுடன் கூடிய ஆறுமுகன், ஐந்துமுக னான சிவன் முதலிய எல்லாத் தேவர்களுக்கும் தலையிலணி யும் இரத்தினமே, சரணாகதவத் ஸல = சரணமடைந்தவர்களி டம் பேரன்புடையவனே, ஸார நிதே = ஸாரமான பொருள்க ளுக்குப் புதையலே, வ்ருஷசைல பதே = வ்ருஷாத்ரிநாதா, மாம் பரி பாலய = அடியேனை காப் பாற்றுவாயாக.

(க) பிரமன் முதலிய தேவர் களுக்கும் தேவனாய், பக்தர்க ளிடம் பேரன்பு பூண்டு எவ்வ ளவு கொடுத்தாலும் குறை யாத ஸாரப் பொருள்களையு டைய நிதிபோன்ற திருமலை நாயகா, என்னைக் காப்பற்ற வேணும்.

ஸசதுர்முக (வி) ஸசதுர்மு கேத்யாதி பூர்வார்த்தத்தினால் 'நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே, நாராயணாத் ருத்ரோ ஜாயதே, நாராயணாத் இந்த்ரோ ஜாயதே, (நாராயணோபநிஷத்து-1) நாராய ணனிடமிருந்து பிரமன் தோன் றுகிறான். நாராயணனிட மிருந்து ருத்ரன் தோன்றுகி றான். நாராயணனிடமிருந்து இந்திரன் தோன்றுகிறான் - என்று நாராயணனிடமிருந்து உண்டாகிற 'தேவதைகளெல்லா ரும் தம்மைப் படைத்த தகப்ப னான நாராயணனுடைய திருவ டிகளைத் தத்தம் சிரமேற்கொள ளுதல் கூறப்படுகிறது. '...நிரை மலர்ப் பாதங்கள சூடி, கற றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார், ஒற்றைப் பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும், மற்றை யமரருமெல்லாம்..' (திருவாய் 1-9-10) என்றாரிறே ஆழ்வார்.

'சரணாகத வத்ஸல' என்றத னால் பிரமன் முதலிய தேவ ரோடு ப்ரஹ்லாதன் மாவலி முதலிய அசுரரோடு அர்ஜுநன் இடையர் முதலிய மனிதரோடு விபீஷணன் முதலிய அரக் கரோடு கஜேந்த்ரன் ஸுமுகன் முதலிய விலங்குகளோடு வாசி யறப் பாசம் வைத்துக் காத் தமை கூறப்படுகிறது.

'ஸாரநிதே' என்றதனால் முற் கூறிய அதிகாரிகளுக்கு அளிக் கத்தக்க ஸாரமான பொருள் களெல்லாம் இவனிடம் ஸம் ருத்தமாக உள்ளன எனப்படு கிறது. இங்ஙனம் அவர்க ளைக் காத்த திருவேங்கட முடையானே, அடியேனையும் காத்தருளவேணுமென்று இந்த சுலோகத்தினால் ப்ரார்த்தித்த படி

அதிவேலதயா தவதுர்விஷஹை:
அநுவேலக்ருதைரபராத சதை: ।
பரிதம் த்வரிதம் வ்ருஷசைலபதே
பரயா க்ருபயா பரிபாஹிஹரே ।। (3)

(ப) அதிவேலதயா = வரம்பு கடந்தபடியால், தவ = உனக்கு, துர்விஷஹை = பொறுக்கமுடி யாவைகளாக, அநுவேலக்ருதை: = ஓயாமல் (என்னால்) செய் யப்பட்ட, அபராதசதை: = பல நூற்றுக்கணக்கான பாபங்களி னால், பரிதம் = நிறைந்தவ னும், த்வரிதம் = மேன்மேலும் பாபம் செய்வதிலேயே பரபரப் புடையவனும் ஆகிய, மாம் = அடியேனை, வ்ருஷசைலபதே ஹரே = வ்ருஷாத்ரி நாதா ஸ்ரீஹரியே, பரயா க்ருபயா = உயர்ந்த கருணையினால், பர பாஹி = காப்பாற்று.

(க) திருமலைநாதா பொறு மைக்கடலான நீயும் வெறுக் கும்படி நான் செய்த பாபங் களுக்கு எல்லையில்லை. இனி மேலும் பாபங்களிலேயே என் மனம் விரைகின்றது. நீ தயை செய்தாலொழிய நான் உய்யும் வழியில்லை; என்னைக் காத்த ருளவேணும்.

அதிவேலதயா (வி) அதிவே லதயா - பரிதம் - 'யத்ப்ரஹ்ம கல்ப நியுதாநுபவேபி அநாச் யம் தத் கில்பிஷம் ஸ்ரு ஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே' (ஸ்ரீவை. ஸ்தவம் 61) எந்த ஒரு பாபமானது பல லக்ஷக் கணக்கான ப்ரஹ்மகல்பங்கள் (ப்ரஹ்ம கப்லமாவது - பிரம னது ஆயுளில் ஒருநாள் அதா வது ஓராயிரம் சதுர்யுகங் களாலும்.) அநுபவித்தா லும் நாசமடையாதோ அத் தகையதொரு பாபத்தை ஜீவன் அரை க்ஷணத்தில் செய்து விடுகிறான் - என்று ஆழ் வானருளிச் செய்தபடி பாபங் களை மிதமாகவல்லாமல் வரம்பு கடந்து க்ஷணந்தோறும் செய் கிறபடியால், பொறுமைக் கட லான உனக்கும் வெறுப்பு உண் டாகும்படி நடந்துகொண்டே னென்கிறார். 'ஏவம் ஸதா ஸகல ஜந்மஸு ஸாபராதம் க்ஷாம்யஸ் யஹோ ததபிஸந்திவிராமமாத் ராத் (") இப்படியாக எல்லா

ஜநமங்களிலும் எப்போதும் 'பாபம் செய்தவன் 'இனிநாம் பாபம் செய்யக்கூடாது' என்று பாபம் செய்யும் எண்ணத்தை விட்ட மாத்திரத்திலேயே அவனைப் பொறுத்தருளுகிறீர் - என றபடி அடியேன் பாபம் செய்த திலிருந்து ஓயந்தாலும் பிழைக்கலாம். அதுதானும் இல்லை யென்கிறார் - 'த்வரிதம்' என்றதனால், மேனமேலும் பாபம் செய்வதிலேயே ஆசையுடையவனாயிருக்கிறேனென்றபடி, த்வரையாவது உத்கண்டை - பேராசை. அடியேனுக்கு உய்யும்வழி வேறில்லையென்றார் - 'பரயா க்ருபயா பரிபாஹி ஹரே' என்று. அன்றேல் 'த்வரிதம் பரிபாஹி' என்று க்ரியா விசேஷணமாக அந்வயித்து 'நீ விரைவாகக் காத்தருள்' என்று பொருள் கொள்ளுதல் தகும்.

**அதிவேங்கடசைலமுதாரமதே:**
**ஜநதாபிமதாதிகதாநரதாத் ।**
**பரதேவதயா கதிதாநிதிகமை:**
**கமலாதயிதாந்நபரம் கலயே ।। (4)**

(ப) அதிவேங்கடசைலம் = வேங்கடமலையில் (வாழ்பவனும்), உதாரமதே: = உயர்ந்த நல்லெண்ணமுடையவனும், ஜநதா அபிமத அதிக தாநரதாத் = மனிதர்கள் திரளுக்கு (அவர்கள்) ஆசைப்பட்ட அளவுக்கும் அதிகமாகவே கொடுப்பதில் ஆசை கொண்டவனும், நிகமை: = வேதங்களினால், பரதேவதயா = உயர்ந்த தேவதையாக, கதிதாத் = ஓதப்பட்டவனும், கமலா தயிதாத் = (த்வத்) திருமகள் நாதனுமான உன்னையல்லால், பரம் = மற்றொருவனை, ந கலயே = ஒரு பொருளாகவும் மதியேன்.

(க) உயர்ந்த எண்ணங்கொண்டு விரும்பியதைவிட அதிகமாகத் தருவதில் ஆசைகொண்டு வேத மோதிய பரம்பொருளான நீ திருமகளுடன் திருவேங்கடமலையில் எளிமையுடன் இருக்க, உன்னைவிட்டு நான் மற்றவனை மதிப்பேனா?

அதிவேங்கட (வி) வேங்கடசைலே - அதிவேங்கடசைலம் ஸப்தமீவிபக்தியர்த்தத்தில் அதி என்ற உபஸர்க்கம் சேர்ந்த திருவேங்கடமலையில் என்பது பொருள். வஸத: என்று ஒரு சொல் வருவித்துக்கொள்க.

உதாரமதி:- உதாரா மதி: யஸ்ய ஸ: என்று விக்ரஹ வாக்யம். 'உதாரோ தாத்ரு மஹதோ:' (அமரகோசம்) என்ற நிகண்டுவின்படி வள்ளல் தன்மையாகிய எண்ணமுடையவனென்றும், உயர்ந்த எண்ணமுடையவனென்றும் இரண்டு பொருள்கள் கூறலாம். முதற்பொருளில் வள்ளலைக் குறிக்கும் உதாரசப்தம் இங்கு வள்ளல் தன்மையைக் குறிப்பிடுவதனால் பாவப்ரதான நிர்த்தேசமாகும். ஔதார்யமாகிய எண்ணத்தையுடையவன் எம்பெருமானென்க. 'தாஸ்ய ரஸிகாம் புக்த்வா ஸம்ருத்திம்' (ஸ்ரீவைகுண 61) தாஸ்ய ரஸிகத்வமாகிற (தொண்டின் சுவையறியுந்தன்மையாகிற) ஸம்பத்தை அனுபவித்து - என்றவிடத்தில் தாஸ்யரஸிகா சப்தத்தை தாஸ்ய ரஸிகத்வ போதகமாக, அதாவது பாவப்ரதான நிர்த்தேசமாகக் கொண்டது போல் இதனைக் கொள்க.

ஜநதா....ரதாத் - இதனால் முற்கூறிய வள்ளல்தன்மையின் எல்லை கூறுகிறது. இந்நூலாசிரியர் திருவேங்கடவனை எதிரில் ஸேவிக்கும்போது அப்பெருமான் தாம் வேண்டும் நித்யஸேவை எனனும் பயனோடு கூட மோக்ஷத்தையும் தருவான் போன்று ஸேவை ஸாதித்தான். அதைக் கொண்டு 'ஜநதாபிமதாதிகதாநரதாத்' என்கிறார். இது 'ஆய்கொண்ட சீர்வள்ளல் ஆழிப்பிரான் (திருவேங்கடத் தென்னானையென்னப்பன்) எனக்கேயுளன், சாய்கொண்ட விம்மையும் சாதித்து வானவர் நாட்டையும் நீ கண்டு கொள்ளென்று வீடுந்தரும் நின்று நின்றே' என்றதை அடியொற்றி அருளிச் செய்யப்பட்டது. 'சாய்கொண்ட இம்மை ஒளியையுடைய ஐஹிக பகவதனுபவம்.

பரதேவதாய கதிதாத் நிகமை: - 'ப்ரயத: தேஜ: பரஸ்யாம் தேவதாயாம் ஸம்பத்யதே' (ச்சாந்தோக்ய 6-8-6) மரணமடைகிறவனுடைய தேஜஸ்ஸு எனப்பட்ட பூதஸூக்ஷ்மங்கள் பரதேவதையிடம் சேருகின்றன என்றும், 'தம் தேவதா நாம் பரமஞ்ச தைவதம்...விதாம' (ச்வேதாச்வ 6-7) அவனை தேவதைகளுக்குள் உயர்ந்த தேவதையாக அறியக்கடவோம் - என்றும் இவை முதலான வேதவாக்யங்களினால் திருமால் பரதேவதையாகக் கூறப்படுதல் காண்க.

இப்படிப்பட்ட பெருமையையுடைய ச்ரிய: பதி திருவேங்கடமலையில் மிகவும் ஸுலபனாக எழுந்தருளியிருக்க வேறொருவனை அடியேன் மதிப்பேனோ என்கிறார் இறுதியடியால்.

**கலவேணுரவாவசகோபவதூசதகோடி**
**வ்ருதாத் ஸ்மரகோடிஸமாத் ।**
**ப்ரதிவல்லவிகாபிமதாத் ஸுகதாத்**
**வஸுதேவஸுதாந்நபரம் கலயே ।। (5)**

(ப) கல வேணு ரவ ஆவச = இனிய புல்லாங்குழலின் இசைக்கு முற்றும் வச

மான; கோபவதூ சததகோடி = நூறுகோடிக்கணக்கான இடைப் பெண்களினால், வ்ருதாத் = சூழப்பெற்றவனும், ஸ்மரகோடி ஸமாத் = கோடி மன்மதர்களை யொத்த (அழகுடைய) வனும்; ப்ரதிவல்லவிக அபிமதாத் = ஒவ்வொரு இடைப்பெண்ணுக்கும் இஷ்டமானவனும், ஸுக தாத் = ஆநந்தம் அளிப்பவனும், வஸுதேவஸுதாத் = வஸுதேவர் மகனுமாகிய உன்னையல்லால், பரம் ந கலயே = மற்றொருவனை நான் மதியேன்.

(க) நீ ஊதுகின்ற குழலோசைக்கு வசப்பட்ட ஒவ்வொரு கோபிக்கும் விருப்பம் நிறைவேறும்படி சுகம் தந்த க்ருஷ்ண பகவானாகிய நீ வேங்கடமலையில் கிட்டியிருக்கும்போது உன்னைவிட்டு மற்றொருவனை மதிப்பேனா?

**கலவேணு** (வி) இதில் திருவேங்கடமுடையானைக் கண்ணனாக அனுபவிக்கிறார். கலம் - அநக்ஷரரஸமாயிருக்கை; கலவேணு ரவமாவது - எழுத்துக்களில்லாது இன்பமூட்டுகிற புல்லாங்குழலொலி. கண்ணனூதும் புல்லாங்குழலின் ஓசையைக் கேட்டு அதனால் இழுக்கப்பட்ட நூறுகோடி கோப ஸ்த்ரீகள் ஓடிப்போய்க் கண்ணனைச் சூழ்ந்து கொண்டமை முதலடியினால் கூறப்படுகிறது. இதுக்கு மூலம் - 'தூவலம்புரியுடைய திருமால் தூயவாயிற் குழலோசை வழியே, கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதுகலிப்ப உடலுளவிழ்ந்து எங்கும் காவலுங் கடந்து கயிறுமாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே' (பெரியாழ் 3-6-1) என்பது ஆகும். கலவேணுரவஸ்ய ஆவசா - சதகோடி. என்றும், கலவேணு ரவேண அவசா சதகோடி: என்றும் பிரிக்கலாம். குழலோசைக்கு மிகவும் வசப்பட்ட இடைப்பெண்களின் நூறுகோடி என்றும் குழலோசையினால் தன்வசமிழந்த இடைப்பெண்களின் நூறுகோடி என்றும் முறையே பொருள் காண்க.

ஸ்மரகோடி ஸமாத் - எல்லோர் மனதையும் ஆசையுண்டாக்கிக் குழப்புமவன் பேரழகு படைத்த ஒரு மன்மதனாவான். அத்தகைய கோடி மன்மதர்களின் அழகையும் தானொருவனே பெற்றவன் கண்ணபிரான்.

இப்படிப்பட்ட அழகுக்குப் பயன் கூறப்படுகிறது ப்ரதிவல்லவிக..... ஸுகதாத் என்று; தக்ஷபுத்ரிகளான அச்விநீ முதலான பெண்கள் இருபத்தெழுவரை மணந்து அவர்களுக்குள் ரோஹிணியை மட்டும் காதலித்து அவளுக்கு மட்டும் ப்ரியனாய் மற்ற பெண்களுக்கு அப்ரியனாய் அதன் பயனாக இன்றும் சாபத்தை அனுபவிக்கின்ற சந்திரன் போலல்லாமல், இவ்வழகைக் கொண்டு பலகோடி கோபஸ்த்ரீகளை மயக்கி அவர்களுள் ஒவ்வொருத்திக்கும் இன்பமூட்டுமவன் கண்ணனென்க.

வஸுதேவ ஸுதாத் - க்ருஷ்ணன் (1) கருநிறமுடையவன் (2) பகைவரை அழிப்பவன் (3) பூதேவிக்கு இன்ப மூட்டுமவன் (4) நிரதிசயஸுகஸ்வரூபமானவன் என்னும் பரத்வத்தைக் குறிக்கும் திருநாமத்தைவிட, வசுதேவர்மகன் என்னும் எளிமையைக் குறிக்கும் திருநாமமே எம்பெருமான் உகப்பது.

இங்ஙனம் த்வாபரயுகத்தில் கண்ணனாயவதரித்த தேவனே இக்கலியுகத்தில் திருவேங்கடமுடையானாக ஸேவை ஸாதிக்கிறானாகையால் அவனைத் தவிர மற்றெவரையும் மதியேனெனகிறார் கடையடியால்.

அபிராமகுணாகர தாசரதே ஜகதேக-
தநுர்த்தர தீரமதே
ரகுநாயக ராம ரமேச விபோ வரதோ
பவ தேவ தயாஜலதே ॥ (6)

(ப) அபிராம குண ஆகர = விரும்பத்தக்க நற்குணங்களுக்கு இருப்பிடமானவனே, தாசரதே = தசரதகுமாரனே, ஜகத் ஏக தநுர்த்தர = உலகிற்கே ஒரு வில்லாளியே, தீரமதே = கலங்காத மனத்தவனே, ரகுநாயக = ரகு குலநாதனே, ராம = இராமபிரானே, ரமா ஈச = (திருமகளின்) சீதையின் மணவாளனே, விபோ = எங்கும்நிறைந்தவனே, தேவ = பளபளவென்று விளங்குமவனே, தயாஜலதே = கருணைக்கடலே, வரதோ பவ = வரந் தந்தருள்வாய்.

(க) எங்கும் நிறைந்து விளங்கும் கருணைக்கடலாய், தசரத குமாரனாய், சீதை மணாளனாய், மனங்கலங்காத சிறந்த வில்லையாளும் வன்மையினால் பகைவரைக் கொன்று ரகு குலத்தைத் தழைக்கச் செய்த திருவேங்கடமுடையானே! நான் வேண்டும் வரத்தைத் தருதல் உனக்கு ஓர் வருத்தமோ?

**அபிராம** (வி) இது முதலாக மூன்று ச்லோகங்களினால் திருவேங்கடமுடையானை இராமபிரானாக அனுபவிக்கிறார். அபிராம குணாகர: - நல்ல குணங்களுக்குச் சுரங்கம் போன்றவன். 'தாதூநாமிவ சைலேந்த்ர: குணாநாமாகரோ மஹாந் (ராமா.கிஷ் 15-20) இமயமலை - பொன் வெள்ளி முதலியனவும், மநச்சிலா கைரிகம் முதலியனவுமாகிய தாதுக்களுக்குச் சுரங்கமா

வது போல் இராமபிரான் நற்குணங்களுக்குச சுரங்கமாகவும் அக்குணங்கட்கும் பெருமையூட்டும் பெருமையுடையவனாகவும் இருக்கிறுன் என்ற தாரையின் வார்த்தையை இங்கு நினைக்க.

தாசரதே - யோகிகளுக்கு இன்பமூட்டுவமனென்றும் பொருள்படும் ராமநாமத்தைவிட தயரதன்தன் மாமதலை என்னும் பொருள்பட்டு ஸௌலப்யத்தைக் குறிப்பிடும் தாசரதி என்னும் திருநாமம் இராம்பிரானுக்கு மிகவும் இன்பந்தருமது.

ஜகதேக தநுர்த்தர - 'தநுர்வேதவிதாம் ச்ரேஷ்ட்ட' (ராமா - அயோ 1-29) தநுர்வேதமறிந்து செயல்படுமவர்களில் இனி இவனுக்கு அவ்வருகில்லை என்னும்படி தானொருவனே உயர்ந்தவன் - என்றது காண்க.

தீரமதே - சதுர்த்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணும், ஹதாந்யேகேந ராமேண மாநுஷேண பதாதிநா ।। (ராமா - ஆரண்ய 26-35) (வாகன மேறிவந்தவர்களாய்) அஞ்சத்தக்க செயல்களைச் செய்யும் பதினாலாயிர மரக்கர்களும் (வாகனமின்றித்) தரையில் நிற்கும் இராமனொருவனால் கொல்லப்பட்டனர் என்பது கொண்டு இராமனின் கலங்காநெஞ்சம் காண்க.

ரமேச - சீதையாயவதரிதத மஹாலக்ஷ்மிக்கு மணவாளனே, 'ராகவத்வேபவத் ஸீதா' (விஷ்ணுபுரா 1-9-44) திருமால் இராமனாயவதரித்த போது திருமகள் சீதையாயவதரித்தாள் என்றது காண்க.

விபு: என்னும் சொல்லுக்கு எங்கும் நிறைந்தவனென்றும் அடக்கியாளுமாற்றல் படைத்தவனென்றும் உள்ள இரண்டு பொருள்களும் இராமனான திருமாலிடம் நன்கு பொருந்தும்.

ரமேச தேவ என்ற இரண்டையும் சேர்த்து பிராட்டியின் மணுளனாய் விளங்குமவனே என்று பொருள்கொள்ளுக. 'உத்தமராஜ கந்யயா அதீவ ராம: சுசுபே' (ராமா - பால - 77-36) அரசரேருகிய ஜநகரின் கந்யையையான சீதையினால் இராமபிரான் மிகவும் விளங்கினான் என்பதனோடு ஒக்குமிது. தேவ:- விளங்குமவன்.

வரத: பவ - நீ வரந்தருமவனாக ஆகுக. வரமின்னதென்பது இதன் கண் பத்தாம் ச்லோகத்தில் தெரியும்.

தயாஜலதே - இதனால் தமக்கு வரம் தருவதற்கு உறுப்பான முக்கியமான குணம் எம்பெருமானிடம் பூர்ணமென்று குறிக்கப்பட்டதாயிற்று.

**அவநீதநயாகமநீயகரம் ரஜநீகர**
**சாருமுகாம் புருஹம் ।**
**ரஜநீசரராஜதமோமிஹிரம் மஹநீய**
**மஹம் ரகுராமமயே ।। (7)**

(ப) அவநீதநயாகமநீயகரம் = பூமியின் மகளான ஸீதைக்கு விரும்பத்தக்க திருக்கையையுடையவனும், ரஜநீகரசாருமுகாம்புருஹம் = சந்திரனைக் காட்டிலுமழகிய தாமரை மலர் போன்ற திருமுகத்தையுடையவனும், ரஜநீசரராஜ. தமோ மிஹிரம் = இராக்கதர் தலைவனாகிய இராவணனென்னும் இருளுக்குச் சூரியனும், மஹநீயம் = பூஜிக்கத்தக்கவனுமான, ரகுராமம் = ரகுவம்ச ராமனாகிய உன்னை, அயே = (சரணமாக) அடைகிறேன்.

(க) சந்திரனைவிட அழகிய உன் திருமுகத்தைக் கண்டு மயங்கி உன் கையை விரும்பிப்பற்றின சீதைக்காக பொல்லா அரக்கனான இராவணனை இருளை மாய்க்கும் சூரியன்போல் மாய்த்துப் பிரமன் முதலிய தேவர்களால் பூஜிக்கப்பெற்று ரகுகுல திலகனாய் விளங்கிய வேங்கடவனே உன்னைச் சரணமடைகிறேன்.

அவநீதநயா (வி) ஜநகசக்ரவர்த்தி யாகபூமியை கலப்பையால் உழாநிற்க அக் கலப்பையுழுத வழியில் பூமியில் நின்றும் தோன்றியவளாதலால் ஸீதை அவநீதநயா எனப்படுகிறுள். அவள் விரும்பத்தக்க திருக்கையையுடையவன் இராமபிரான். 'இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ, ப்ரதீச்ச ஏநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா' (ராமா-பால-73-33) ராமா! எனது பெண்ணுகிய இந்த ஸீதை உமக்குக் கூடஇருந்து தருமங்களைச் செய்யுமவள். இவளை ஏற்றுக்கொள்ளும். உமக்கு மங்களமுண்டாகுக. உமது கையினால் இவளது கையைப் பிடித்துக் கொள்ளும் என்றபடி. வில்லை முறித்து வீரத்தைக் காட்டிய இராமனின் திருக்கையன்றோ சீதை விரும்புமது.

ரஜநீகர - அம்புருஹம் மலர்ச்சியிலும் சிவப்பிலும் தாமரைமலர் போன்ற இராமனது திருமுகம் சந்திரனைவிட அழகியது. 'சந்த்ரகாந்தாநநம் ராமம்...ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:(ராமா-அயோ-3-28) சந்திரனைவிட அழகிய திருமுகமுடைய இராமனைத் தயரதன் தன்னெதிரே வரும்போது பார்த்துக் கொண்டேயிருந்தும் திருப்தியுடையவில்லை என்ற இராமாயண ச்லோகம் இதுக்குமூலம்.

ரஜநீசர - மிஹிரம் - கதிரவன் தன்னைவிட்டுப் பிரியாத ஒளி காரணமாகக் கனவிருளை அகற்றுமவன். இராம பிரானாகிய கதிரவன் தன்னை விட்டுப் பிரியாத ஒளியான சீதை காரணமாக இராவணனென்னும் அரக்கரரசனாகிய இருளையகற்றுமவன்.

மஹநீயம் - கௌரவிக்கத்தக்கவன். ராவணவதத்திற்குப் பின்பு ப்ரஹ்மாதி தேவர்கள் இலங்கைக்கு வந்து 'பவாந் நாராயணோ தேவ: (ராமா-யுத்த-120-13) தேவரீர் மனிதரல்ல, நாராயணனென்னும் தேவதை - என்று தொடங்கித் துதித்துக் கௌரவித்தார்களிறே.

இத்தகைய ராமனாயவதரித்த உன்னைச் சரணடைகிறேனென்கிறார்.

*ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம்*
*ஸ்வநுஜஞ்ச ஸுஜாயமமோகசரம் ।*
*அபஹாய ரகுத்வஹமந்யமஹம் ந*
*கதஞ்சந கஞ்சந ஜாது பஜே ।। (8)*

(ப.உ) ஸுமுகம் = அழகிய முகத்தையுடையவனும், ஸுஹ்ருதம் = நல்லமனமுள்ளவனும், ஸுலபம் = அடைவதற்கு எளியவனும், ஸுகதம் = இன்பமளிப்பவனும், ஸுஅநுஜம் = நல்ல தம்பியையுடையவனும், ஸுஜாயம் = நல்ல மனைவியை உடையவனும், அமோக சரம் = வீணாகாத பாணங்களையுடையவனும், ரகு உத்வஹம் = ரகு குலத்தில் முக்கியனுமாகிய உன்னை, அபஹாய = விட்டு, அந்யம் கஞ்சந = வேறு ஒருவனை, கதஞ்சந = எவ்விதத்தாலும், ஜாது = ஒருபோதும், நபஜே = வணங்கமாட்டேன்.

(க) மனத்தின் நன்மை அழகிய முகத்தில் தெரியுமவனாய், உன்னைப் பிரியாப் பெருமை படைத்த லக்ஷ்மணனோடும் பதிவிரதையான ஸீதையுடனும் எல்லார்க்குமெளியனாய் ஸேவைதந்து ஆநந்தமூட்டுபவனாய், எதிரிகளைக் குறிதவறாது கொல்லும் பாணங்களைத் தொடுக்கும் ரகு குலக்குமரனான வேங்கடவனே! நீ என்னை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் உன்னைத் தவிர வேறொருவனை அடியேன் வணங்குவேனோ!

ஸுமுகம் (வி) ஸுமுகம் ஸுஹ்ருதம் - நல்ல மனமுடையவர்களின் முகம் அழகாக இருக்கும். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்களிறே. இவ்விரண்டாலும் பலித்த அம்சம் கூறுகிறது ஸுலபம் என்று. தஞ்சமடைவதற்கும் ஆராதனைக்கும் எளியன் என்றபடி. எளியவனாயிருந்து செய்வது என்னவெனில் சொல்லுகிறது ஸுகதம் என்று. ஆச்ரிதர்க்கு ஸுகத்தைத் தருதல் எளிமைக்குப் பயனென்றபடி. இதற்கெல்லாம் காரணம் பாகவத புருஷகாரமும் பிராட்டி புருஷகாரமும் என்கிறது ஸ்வநுஜம் ஸுஜாயம் என்று. தம்பிக்கும் மனைவிக்கும் நன்மையாவது பெருமாளை விட்டுப் பிரியாத தன்மையேயாம். 'நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ' (ராமா-அயோ-53-31) ரகுகுலதிலகரே உம்மைப் பிரிந்தால் ஸீதை பிழையாள் நானும் பிழையேன் - என்றரிறே இளையபெருமாள். ஸுகத்தைத் தரும் போது விரோதியைப் போக்கியன்றோ தருவது. விரோதி போக்குதற்கு உறுப்பான - பழுதாகாத பாணங்களையுடைமை சொல்லுகிறது - அமோக சரம் என்று. ரகு உதவஹம் - ரகுவம்சத்தரசர்களை அவவமசத்தில் தான் உதித்து உயர்த்துமவன் என்றபடி. இத்தகைய ராமனாயவதரித்த திருவேங்கடவனையல்லது வேறொருவரையும் ஸேவியேன என்கிறது இறுதியடியால்.

'சோபநா ஜாயா யஸ்ய ஸ: என்ற வ்யுத்பத்தியின் படி பஹுவ்ரீஹிஸமாஸத்தில் ஜாயா சப்தத்தின் கடைசிப் பகுதிக்கு விதிக்கப்படுகின்ற 'நி' என்ற ஸமாஸாந்த ப்ரத்யயம் (வைகல்பிகம்) அநித்யமாகையால் அது வராத பக்ஷத்தில் 'ஸுஜாய' என்று ரூபம் ஸித்திக்கும். வந்தால் "ஸுஜாநி:" என்றாகும்.

**விநா வேங்கடேசம் ந நாதோ நநாத:**
**ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி ।**
**ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத**
**ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச ।। (9)**

(ப.உ) வேங்கடேசம் விநா = திருவேங்கடத்தானைத் தவிர, நாத: ந நாத: = நாதனே இல்லை. ஸதா = எப்பொழுதும், வேங்கடேசம் = வேங்கடத்தானை, ஸ்மராமி ஸ்மராமி = நினைத்தபடியே இருக்கிறேன். ஹரே வேங்கடேச = பாபங்களைப் போக்கும் வேங்கடேசா, ப்ரஸீத ப்ரஸீத = (எனக்குத்) தவறாமல் அருள் செய்யவேணும். வேங்கடேச = ஐச்வர்யத்தைத் தரும் • பெருமாளே, ப்ரியம் = (நான்) விரும்பியதை, ப்ரயச்ச ப்ரயச்ச = விரைவாகத் தந்தருள்.

(க) திருவேங்கடமுடையானே, நீ ஒருவனே நாதனென்று உன்

னையே எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கும் என்னிடம் தயைபுரிந்து, நான் விரும்பியதை இப்போதே தந்துவிடத் தாமதமேன்?

விநா வேங்கடேசம் (வி) நாத்தயதே இதி நாத:- விரும்பப்படும் தலைவன். இது தன்னில் முதலடி, 'வேங்கடேச ஸமோ தேவ: ந பூதோ ந பவிஷ்யதி' என்னும் புராணவசனத்தை அடியொற்றியது. திருவேங்கடமுடையானோடொக்கும் பெருமாள் இதுவரையில் அவதரிக்கவில்லை. இனி அவதரிக்கப்போவதுமில்லை என்பது அதன் பொருளாகும். ஆதலால் அவனையே எப்பொழுதும் நினைத்திருக்கிறேனென்கிறார் இரண்டாமடியால். மூன்று நாலாம் அடிகள் அவனையே வேண்டுவதாக அமைந்துள்ளன. அவற்றால், அடியேனிடம் தயைபுரிந்து அடியேன் விரும்புவதைச் சடக்கெனத் தந்தருள வேண்டும் என்கிறது. விரும்பியது இன்னதென்பதை அடுத்த ச்லோகத்தில் வெளியிடுகிறார்.

அஹம் தூரதஸ்தே பதாம்போஜயுக்ம
ப்ரணாமேச்சயாऽऽகத்ய
ஸேவாம் கரோமி ।
ஸக்ருத்ஸேவயா நித்ய ஸேவா
பலம் த்வம்
ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ
வேங்கடேச ॥ (10)

(ப.உ.) ப்ரபோ வேங்கடேச = ஸ்வாமீ ஸ்ரீவேங்கடேசா, அஹம் = நான், தே = உன்னுடைய, பத அம்போஜயுக்ம ப்ரணாம இச்சயா = திருவடித்தாமரைகள் இரண்டினை வணங்க வேணுமென்ற விருப்பத்தினால், தூரத: ஆகத்ய = தூரத்திலிருந்து வந்து, ஸேவாம் கரோமி = ஸேவை செய்கிறேன். ஸக்ருத் ஸேவயா = (இந்த) ஒரு தடவை ஸேவிப்பதனால், நித்யஸேவாபலம் = நித்தியமாக ஸேவிக்கும் பலனை, ப்ரயச்ச ப்ரயச்ச = தவறாமல் தந்தருள்.

(க) திருவேங்கடநாதனே! உன் திருவடித் தாமரைகளை வணங்க விருப்பங்கொண்டு வெகுதூரத்திலிருந்து வந்து ஸேவித்திருக்கும் எனது இவ்வொரு தடவை ஸேவைக்குப் பயனாக நான் விரும்புவது எப்போதும் ஸேவித்திருப்பதொன்றையே ஆகையால் அதைத் தந்தருளவேணும்.

அஹம் தூரதஸ்தே (வி) அடியேன் வெகுதூரத்திலிருந்து (அதாவது ஸ்ரீரங்கத்திலிருந்து) ஆசார்யரான மணவாளமாமுனிகளுடன் அவருக்கு ப்ரியமாக உன் திருவடிகளைத் தொழ வேணுமென்று வந்து ஸேவை செய்கிறேன் என்கிறார் முன்னிரண்டடிகளால். வாரீர் அண்ணாவே நீர் இப்போது ஸேவிப்பது என்னிடம் ஐஹிகமாகவும் ஆமுஷ்மிகவாகவும் உள்ள வேறு பலன்களைப் பெற்று என்னைவிட்டு அகன்று போவதற்காகவா என்று பெருமாள் கேட்டருள்வதாக நினைத்து விடையளிக்கிறார் - மேலிரண்டடிகளால். தேவரீரை விட்டகலாமல் நித்யம் ஸேவித்துக்கொண்டிருக்கையே இன்றைய ஸேவைக்குப் பயனாய் அடியேன் வேண்டுவது, அதனை விரைவில் தந்தருளென்று வேண்டுகிறபடி. இங்கு நித்ய ஸேவைவ பலம் நித்யஸேவா பலம் என்று அவதாரணபூர்வபத கர்மதாரய ஸமாஸம் கொள்க. இதற்கு முன்பு 'வரதோபவ' (6) 'ஸங்கதம்' (8) என்று வரமாகவும் ஸங்கமாகவும் குறிக்கப்பெற்றது இந்த நித்யஸேவையேயாகும். நித்யஸேவையாவது இங்குள்ளவரையில் திருவேங்கடவனது நித்ய ஸேவையும் இவ்வுடலை விட்டபின்பு 'ஸதா பச்யந்தி ஸூர்ய:' (ஸுபாலோபநிஷத்-6) நித்யஸூரிகள் எப்போதும் ஸேவிக்கிறார்கள் என்றபடியே பரமபதத்தில் நித்ய ஸேவையுமாம்.

அஜ்ஞாநிநா மயா தோஷாந்
அசேஷாந் விஹிதாந் ஹரே ।
க்ஷமஸ்வத்வம் க்ஷமஸ்வத்வம்
சேஷசைல சிகாமணே ॥

(ப.உ.) சேஷசைலசிகாமணே = ஆதிசேஷமலைக்குத் தலையிலணியும் மணியே, ஹரே = பாபங்களைப் போக்குமவனே, அஜ்ஞாநிநா மயா = அறிவில்லாத என்னால், அசேஷாந் = மிச்சமில்லாமல், விஹிதாந் = செய்யப்பட்ட தோஷாந் = அபசாரங்களை, த்வம் = நீ, க்ஷமஸ்வ = பொறுத்தருள். த்வம் க்ஷமஸ்வ = நீ பொறுத்தருள்.

(க) பாபம் செய்தால் நீ தண்டிப்பாயென்று அறியாமல் ஒன்று விடாமல் நான் செய்த பாபங்களைப் பொறுத்துப் போக்கியருள். அதற்காக அல்லவா ஹரி என்று பேர் படைத்துத் திருவேங்கடமலையில் நீ விளங்குகிறாய்.

அஜ்ஞாநிநா (வி) நித்ய ஸேவை தருவதற்குத் தடையாக நீர் மலைமலையாகச் சேர்த்துவைத்த பாபங்களிருக்கின்றனவே, எப்படித் தரமுடியுமென்று பெருமாளுக்குக் கருத்தாயிருக்குமோவென்று அதற்கு விடையளிக்கிறார். இதனால் இது பாபச்செயலென்றும், செய்தால் தண்டிப்பீரென்றும் அறியாமல் அடியேன் செய்ததத்தனையும் தேவரீர் பொறுமைக்கிலக்காக்கிப் போக்கியருளீர் என்று விண்ணப்பித்து ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டியருளினாராயிற்று.

ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம் முற்றிற்று.



# ஸ்ரீராமானுஜர் நிர்வாகத்தில் ஸ்ரீரங்கம் கோவில்

திரு. பஞ்சு. அரங்கநாதன் - சென்னை.

### முன்னுரை

ஜகத்ரட்சகனான விஷ்ணுவை பரம்பொருளாகப் போற்றும் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தில் ஸ்ரீராமானுஜர் மாணிக்கம் போன்று ஒளி வீசுகிறார். அவருக்கு முன் சென்றவர்கள் அவரது திருமுடி சம்பந்தத்தாலும், பின்வந்தவர்கள் அவரது திருவடி சம்பந்தத்தாலும் பேரின்பம் அடைந்தனர். ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தமே "எம்பெருமானார் தரிசனம்" என்றழைக்கப்படுவதில் இருந்து ஸ்ரீராமானுஜரின் சிறப்பையும் உயர்வையும் உணரலாம்.

ஸ்ரீராமானுஜர் வேதவியாசரின் பிரம்ம சூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைத பரமாக உரை எழுதி "பாஷ்யகாரர்" என்று புகழப்படுகிறார். மேலும் ஸ்ரீரங்கம் கோவிலின் நிர்வாக அதிகாரியாக விளங்கி பலசீர்திருத்தங்களை செய்துள்ளார். அதைப் பற்றி இங்குக் காணலாம்.

### காஞ்சியிலிருந்து ஸ்ரீரங்கம் செல்கை

புண்யகோடி விமானத்தில் உறையும் காஞ்சி வரதராஜனுக்கு திருமஞ்சனநீர் கொணரும் கைங்கர்யம் செய்து வந்த ராமானுஜரை ஸ்ரீரங்கம் அழைத்துவந்து ஆளவந்தார் காலத்திற்குப் பிறகு வெற்றிடமாகவே இருந்த வைஷ்ண ஆச்சார்யபீடத்தில் அமர்த்த வேண்டி அரங்கநாதப் பெருமானிடம் முறையிட்டனர் பல ஸ்ரீவைஷ்ணவப் பெருமக்கள்.

அரங்கன நியமனப்படி காஞ்சி சென்ற திருவரங்கப்பெருமாளரையரும் வரதராஜனை தன் ஆடல், பாடல்களால் கவர்ந்து ராமானுஜரைப் பெற்றுத் திரும்பினார்.

### வள்ளலுக்கு வரவேற்பு

ராமானுஜரை வரவேற்க ஸ்ரீரங்கமே திரண்டது. அரங்கநாதப்பெருமான் நியமனப்படி சேனை முதலிகள், பெரியநம்பி ஆகிய அடியார்களுக்கும் சீடர்களும் ஸ்ரீவைஷ்ணவப் பெருமக்களும் வரவேற்க ராமானுஜர் பூலோக வைகுண்டமாகிய ஸ்ரீரங்கம் கோவிலில் நுழைந்தார். அரங்கநாதப் பெருமாளும் திருக்கைத் தலத்தில் புறப்பாடாகி ராமானுஜரை எதிர்கொண்டான். ராமானுஜரும் அரங்கநாதரை தரிசித்து மெய் மறந்து நின்றார்.

### அரவணையில் அரங்கநாதப் பெருமாள்

"குடதிசை முடியை வைத்து, குணதிசைபாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டி தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக்கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ என்செய்கேன் உலகத்தீரே?"

அனைத்து ஆழ்வார்களும் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்டுப் பாடிப் பரவிய எம்பெருமானின் சயனக் கோலத்தைக் கண்டு களித்த ராமானுஜரும் "அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்ற திருப்பாணாழ்வாரின் பாசுரம் முற்றிலும் உண்மையானதே என்றெண்ணிப் பிரார்த்தித்து நின்றார்.

### ராமானுஜர் உடையவர் ஆதல்

அழகிய மணவாளனாகிய அரங்கநாதனும் கடலினும் பெரியனவாகிய தம் திருக்கண்களில் அருள் பொங்க கமலவாய் திறந்து "ராமானுஜா, நம் நித்ய விபூதியையும் (பரமபதம்). லீலா விபூதியையும் (பூவுலகம்) உமக்குத் தந்தோம். நீ நம் வீட்டுக் கார்யத்தையும் (கோவில் பணி) ஏற்று நடத்துக. உலகம் உன்னை 'உடையவர் என்று போற்றும்' என்று அருளிச் செய்தார்.

### வைகாஸனத்தில் இருந்து பாஞ்சரர்த்ர பூஜை

பூலோக வைகுண்டமாகிய ஸ்ரீரங்கம் கோவில் மிகப்பெரியது. அதன் பணியாளர் எண்ணிக்கையும், சொத்துக்களும் மிக அதிகம். உடையவர் ஆழ்ந்து சிந்தித்து பலப்பல சீர்த்திருத்தங்களை செய்தார். முதலில் வைகாஸன முறைப்படி நடைபெற்று வந்த ஆலய பூஜை முறைகளை பாஞ்சராத்ர முறைக்கு மாற்றினார். முதன்மைப் பணியாளர் தலைவர் (Chief Personal Officer) ஆக அகளங்க நாட்டாழ்வார், உள்துறை அதிகாரியாக முதலியாண்டான், வைதிக அதிகாரியாக கூரத்து ஆழ்வான் ஆகியோரை நியமனம் செய்தார்.

## பணியமைப்புகள்

அமுதுபடி, சாததுபடி - திருமாலை, திருமஞ்சனம, திருவிளககுகள, திருவாராதனம், பராமரிப்பு போன்ற ஒவ்வொரு பிரிவுகளையும ஆராயநது எததனை பணியாளர ஒருபிரிவிற்கு, தேவை, அவர்களுடைய கடமைகள யாது? இவற்றை செமமையாக முடிவு செய்து திறமபடச செயற்படுததினார்.

## தமிழ்ப்பற்று

ஸ்ரீரங்கம ஆலய நிர்வாக சீர்திருத்தங்களை முறைப்படி செய்து முடித்த உடையவர், ஒவ்வொரு பிரிவு பணியாளர் அமைப்புகளுக்கும் தூய, இனிய தமிழ்ப்பெயர்களைச் சூட்டி அமிழ்தினும் இனிய தமிழ்மொழியின் மீது தாம் கொண்ட பற்றினை வெளிப்படுத்தினார்.

"திருப்பணி செய்வார், விண்ணப்பம் செய்வார். உள்ளூரார், திருக்கரகக்கையார், திருப்பதியார், பாகவத நம்பிமார், கோயில் கணக்கன்மார, சடகோபதாசன்" ஆகியன அவர் சூட்டிய சில தமிழ்ப்பெயர்களாகும்.

## திருவிழாக்கள்

ஆலய தினசரி பூஜைக்கு ஏற்ப பற்பல நிர்வாக சீர்திருத்தங்களை செய்தருளிய உடையவர் ஆலயத்தின் தினசரி உற்சவம், பட்சத்து உற்சவம், மாத உற்சவம், வருஷ உற்சவம் ஆகியன வைதிக முறைப்படியும் வெகு விமரிசையாகவும் நடப்பதற்கும உரிய ஏற்பாடுகளை செய்தருளினார்.

## திருநந்தவனப் பராமரிப்பு

அரங்கனின் அலங்காரத்திற்கு தேவையான மலர்களைப் பயிரிடவும், பராமரிக்கவும் புதிய மலர்இனங்களை வளர்ககவும் கோவில் நந்தவனங்களை ஆராய்ந்து தோட்டக்கலைப் பணியாளரகளை நியமிததார.

## முடிவுரை

ஸ்ரீராமானுஜர் ஈடுஇணையற்ற மகானாக விளங்கினார். மதப்புரட்சி, சமுதாயப்புரட்சி, நிர்வாகப் புரட்சி என்று ஒவ்வொரு துறையிலும் தலைசிறநத நிபுணராக விளங்கினார். அவர் ஸ்ரீரங்கம் கோவிலில் மேற்கொண்ட சீர்திருத்தங்கள் அவர் எப்பேரப்பட்டமேதை என்பதை பறைசாற்றுகிறது.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

'**பிரம்ம புராணம்**' கோ பூஜைக்கு மந்திரம் தந்து மார்க்கத்தையும் காட்டுகிறது.

'**பவிஷ்ய புராணம்**' பசுவை வலம் வந்தால் பூமியை வலம் வந்ததாகக் கூறுகிறது.

'**மனுஸ்மிருதி**' பசுவைக் கொல்வதை உப பாதகமாக வருணிக்கிறது. அதற்கு பரிகாரம் மிகக் கடினமான 'சாந்திராயண' விரதமாகும்.

'**ஆயுர்வேதம்**' உடல் நலனுக்காக, தயிர், பால், வெண்ணெய், நெய் உபயோகிக்க கூறுகிறது.

'**ராஜ நிகண்டு**' என்னும் நூல் பசுவின் பாலை பருகுவதால் ஏற்படும் பலன்களை விவரிக்கிறது.

வெள்ளை நிற பசுவின் பால் வாதத்தை ஒழிக்கும்.
கருப்பு நிற பசுவின் பால் பித்தத்தை நீக்கும்.
சிவப்பு நிற பசுவின் பால் சிலேஷ்மத்தைக் குறைக்கும்.
பழுப்பு நிற பசுவின் பால் இம்மூன்றையும் செய்யும்.

திரு. N.C. கோபாலன் - சென்னை.

卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐卐

யயாதியின் மகன் யது. யயாதி தனக்கு ஏற்பட்ட ஒரு சாபத்தின் விமோசனம் பொருட்டு யதுவிடம் தன் முதுமையைப் பெற்றுக் கொண்டு அவன் இளமையைத் தனக்குத் தரும்படி கூற யது இதனை மறுத்துவிட்டான். இதுவே யதார்த்தம். பின்பு யயாதி தன் கடைசிப்பிள்ளையான பூருவிடம் இவ்வாறு கேட்க அவன் தயங்காது சம்மதித்தான். இதுவே பூடகம் ஆகும். விளைவு? யதுவுக்கு ராஜ்யம் ஆள உரிமை தர யயாதி மறுத்துவிட்டனர். இவன் வம்சம் யது வம்சம் - "யாதவர்" ஆவர். இந்த வம்சத்தில் கிருஷ்ண பரமாத்மா பிறந்தார்.
பூருவுக்கு மிக நீண்ட காலம் தனக்கு இளமையைக் கொடுத்துப் பொறுமையாக இருந்தபடியால் யயாதி அரச உரிமையை பூரணமாகக் கொடுத்துச் சென்றார். இவன் வம்சத்தில் தோன்றியோர் புரு வம்சத்தினர் - குரு வம்சத்தினர். கௌரவர்கள், பாண்டவர்கள் இரு சாராரும் புரு வம்சத்தினர். இந்த வம்சத்தில் அர்ஜுனன் தோன்றினான். கிருஷ்ண பரமாத்வானின் இணையற்ற தோழன்.

ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

# இரண்டும் ஒன்றே

திரு. எம்.எஸ். பிச்சுமணி - மன்னார்குடி மங்கலம்.

1) ஸ்ரீகாளஹஸ்தி திருத்தலத்தில், ஸ்ரீவிக்ன விநாயகர் பாதாள விநாயகராக ஒரு பாதாளத்திற்குள் அமர்ந்து கொண்டு அருள் பாலித்து வருகிறார்.

விருத்தாசலம் விருத்தபரீஸ்வரர் ஆலயத்தில் நில மட்டத்திற்குக் கீழே சன்னதி கொண்டு காட்சி அளித்து வரும் ஆழத்துப்பிள்ளையாரைப் பார்த்து வழிபடலாம்.

2) கொடுமுடி என்ற ஊரில் பிரம்மா, விஷ்ணு, சிவன் கோவில் ஒன்றாக உள்ளது.

சுசீந்திரம் என்ற திருத்தலத்தில் தாணுமாலயன் என்ற திருப்பெயரில் முத்தெய்வங்களும் காட்சியளிக்கிறார்கள்.

3) பிரம்மா உற்சவம் நடத்திய திருத்தலம் திருக்கச்சி என்ற காஞ்சீபுரம் ஆகும். தமிழ் நாட்டில் உள்ளது.

பிரம்மா யாகம் நடத்திய திருத்தலம் கேரள மாநிலத்தில் உள்ள ஜனார்த்தனமாகும். (வல்கல க்ஷேத்திரம்).

4) திருவயோத்தி, திருப்புல்லாணி, திருப்புக்குழி, திருவெள்ளூர், திருவெள்ளம்பூதங்குடி, திருவெள்ளியம்குடி-சீர்காழி என்ற சீராம விண்ணகரம் என்ற ஏழுதலங்களும் சப்த இராம க்ஷேத்திரங்களாகும்.

திருவெண்காடு, திருவையாறு, திருமயிலாடுதுறை, திருவிடைமருதூர், திருச்சாய்காடு - திருமுதுகுன்றம், திருவாஞ்சியம் ஆகிய ஏழு திருத்தலங்களும் சப்த சிவ க்ஷேத்திரங்களாகும். (காசிக்கு நிகர்).

5) திருவிடைமருதூர் திருத்தலத்தில் - பிரம்மனுக்குத் தனிக்கோவில் உள்ளது.

உத்தமர் கோயில் திருத்தலத்தில் - பிரம்மா - சரஸ்வதிக்கும் தனிக்கோவில் உள்ளது.

6) அழகர் கோவில் திருத்தலத்தில் உள்ள ஸ்ரீசுந்தரராஜப்பெருமாளுக்குத் தினமும் நூபுர கங்கை ஜலத்தினால்தான திருமஞ்சனம் செய்து வருகிறார்கள்.

தினமும் இராமேஸ்வரம் இராமநாத ஸ்வாமிக்கு கங்கை ஜலம் கொண்டுதான் அபிஷேகம் செய்து வருகிறார்கள்.

7) சிவபெருமான வடக்கே ஸ்ரீசைலத்தில் "உத்திரார்ஜுனம்" என்றும், தெற்கே அம்பா சமுத்திரத்திற்கு அருகில் உள்ள திருப்புடைமருதூரில் "ஸ்புடார்ஜுனம்" என்றும், மத்தியில் உள்ள திருவிடைமருதூரில் "மத்தியார்ஜுனம்" என்றும் மூன்று நிலைகளில் காட்சியளித்து வருகிறார்.

மகாவிஷ்ணு - வடக்கே பூரி ஜகந்நாதராக நின்ற திருக்கோலத்தில் பூரி என்ற தலத்திலும் தெற்கே திருப்புல்லாணி திருத்தலத்தில் சயன திருக்கோலத்திலும், - மத்தியில் திருமழிசை திருத்தலத்தில் அமர்ந்த திருக்கோலத்திலும் மூன்று நிலைகளில் சேவை சாதித்து வருகிறார்.

8) திருக்குறுங்குடி திருத்தலத்தில் சிவனும் விஷ்ணுவும் இணைந்தே அருள் பாலித்து வருகிறார்கள்.

சிதம்பரத்தில் கோவிந்தராஜனும் - நடராஜனும் இணைந்தே பரிபூரண கடாக்ஷத்தைக் கொடுத்து வருகிறார்கள்.

9) மைசூர் சாமூண்டீஸ்வரியை ஆதிசங்கரர் ஒருசமயம் கேரளாவிற்கு அழைத்துச் செல்ல விரும்பி - ஈஸ்வரியின் அனுமதியுடன் புறப்பட்டார். போகும் வழியில் "கொல்லூர்" என்ற திருத்தலத்தில் மூகாம்பிகையாக அமர்ந்து விட்டாள்.

ஒரு சமயம் கேரளாவைச் சேர்ந்த மந்திரவாதி ஒருவன் மைசூர் சாமூண்டீஸ்வரியை மந்திரசக்தியால் கட்டி அழைத்துச் செல்லும் போது பண்ணாரியில் மாரியம்மனாக தங்கிவிட்டாள்.

10) சங்கரன்கோவிலில் கோமதி ஆடி மாதத்தில் தவம் இருந்து சங்கரனின் அனுக்ரஹத்தைப் பெற்று 'ஆடித்தபசு' உற்சவத்தை நிலை நாட்டினாள்.

கரிவலம் வந்தநல்லூரில் பார்வதிதேவி பரமசிவனை நினைத்து ஆவணி மாதத்தில் தபசு இருந்தாள். இன்றும் "ஆவணித்தபசு" திருவிழா பிரசித்தி பெற்று விளங்குகிறது.

11) மதுரையில் ஸ்ரீமீனாட்சியம்மன் வைகைக் கரையில் வீற்றிருந்து அருள் பாலிக்கிறாள். மீனாட்சியம்மனைத் தரிசித்தப் பிறகுதான் சொக்கநாதரைத் தரிசிக்க வேண்டும்.

திருநெல்வேலியில் ஸ்ரீகாந்திமதியம்மன் - தாம்பிரபரணி நதிக்கரையில் கோயில் கொண்டுள்ளான். காந்திமதி அம்மனை தரிசித்தப் பிறகுதான் நெல்லையப்பரைத் தரிசிக்கவேண்டும்

12) சிவபெருமானை - சென்னை மயிலாப்பூரில் பார்வதிதேவி மயில் உருவில் வந்து வழிபட்டாள்.

சிவசக்தி - சிவபெருமானை மாயூரம் என்ற தலத்தில் மயில் உருவில் வழிபட்டாள். இன்றும் மயிலாடுதுறை என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

13) கண்டி கதிர்காமத்தில் (இலங்கை) திருமுருகன் சன்னதிக்கு முன்பாக இன்றும் ஒரு திரை எப்போது மூடி மறைக்கப்பட்டிருக்கும். இது ஓர் ரகசியம்.

சிதம்பரத்தில் நடராஜர் சன்னதியிலும் ஒரு திரை இருக்கும். இதனை சிதம்பர ரகசியம் என்பார்கள்.

14) ஸ்ரீரங்கத்தில் உள்ள வாகனங்களுக்குத் தினமும் நிவேதனம் உண்டு.

கும்பகோணத்திற்கு அருகில் உள்ள நாச்சியார் கோயில் கல் கருட வாகனத்திற்கும் தினமும் நிவேதனம் உண்டு.

15) மைசூர் அரண்மனையிலிருந்து திருநாராயணபுரம் செல்வபிள்ளைக்குள்ள ஆபரணங்கள் அனைத்தும் வைரமுடி சேவையன்று எடுத்துச் செல்லப்படும்.

கேரளாவில் உள்ள பந்தள மகாராஜா அரண்மனையிலிருந்து ஸ்ரீஸ்வாமி அய்யப்பனுக்கு மகரஜோதி தினத்தன்று அவருக்குரிய ஆபரணங்கள் எடுத்துவரப்படும்.

16) சோளிங்கபுரத்தில் மனநோய் உள்ளவர்களுக்கு பரிகாரங்கள் உண்டு.

குணசீலத்தில் மனநோய் கண்டவர்களுக்கும் பரிகாரங்கள் உண்டு.

17) திருக்குறுங்குடி தலத்தில் நம்பாடுவான் என்ற பக்தனுக்காக கருடாழ்வாரும் துவஸ்தம்பமும் விலகி இருக்கும்.

திருப்பங்கூர் திருத்தலத்தில் நந்தனாருக்காக நந்தி விலகியிருக்கும்.

18) கோயம்புத்தூர் மாவட்டம், சிங்காநல்லூர் - வெள்ளாநல்லூர் சாலையில் எமனுக்குத் தனிக்கோவில் உள்ளது.

சித்ரகுப்தனுக்கு காஞ்சீபுரத்தில் தனிக்கோயில் உள்ளது.

19) துவாபரயுகக்கண்ணன் தனது பக்தனான பார்த்தன் வெற்றிபெற, நிலவொளியில் (பூரணசந்திரன்) அம்மாவாசை தினத்தைக் காட்டி அருள்பாலித்தார்.

இக்கலியுகத்தில், அபிராமியம்மையார் தனது பக்தனுக்கு அம்மாவாசை தினத்தன்று பூரண ஒளியான பௌர்ணமியை காட்டி அருளினாள்.

20) சிவகவி ஒருசமயம், தனது குருவின் நிலத்தில் மேய்ந்துகொண்டிருந்த அரசனின் குதிரையை தன் திருவாக்கினால் மாறச்செய்தார். குருவின் விருப்பப்படி மீளவும் செய்தார்.

திருமழிசை ஆழ்வாருக்காக மகாவிஷ்ணு, ஆழ்வார் விரும்பியபடி தனது படுக்கையான ஆதிசேஷனையும் எழுப்பிக்கொண்டும் - மீண்டும் தனது பக்தனுக்காக மீண்டும் துயில் கொண்டும் சொன்னவண்ணம் செய்தார்.

21) தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயம் - அதன் கோபுரமும் - பிரசித்தி பெற்றது. இதன் நிழல் விழாது.

கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள ஆல

யம் அதன் கோபுரமும் - தஞ்சையைப் போன்றேயுள்ளது. நிழல்விழாது.

22) திருவாரூர் தியாகராசனுக்குத் தினமும் தூதுவளை கீரையும் பாகற்காய் கூட்டும் சிறப்புப்படையலாகப் படைக்கப்படுகிறது.

ஸ்ரீமுஷ்ணம் ஆதிவராஹப்பெருமாளுக்குத் தினமும் கோரைக் கிழங்கு பிரசாதம் சிறப்புப் படையலாகப் படைக்கப்படுகிறது.

23) பூக்காமலேயே காய்ப்பது "பலா". பூத்தும் காய்க்காதது "பாதிரி". இது சிவத்தலமான திருப்பாதிரிப்புலியூரில் பெருமையாகப் பேசப்பட்டு வரும் சொல்.

நெல்லைமாவட்டம் ஆழ்வார்திருநகரி திருத்லத்தில் உள்ள ஒரு புளியமரம் உறங்காப் புளியாகப் போற்றப்பட்டு வருகிறது.

24) காசி விஸ்வநாதர் திருக்கோவிலில், கருடன் பறக்காது, பல்லி ஒலி எழுப்பாது என்ற சாபம் உள்ளது. இது கங்கைக் கரையில் உள்ள திருத்தலம்.

மதுரை மாவட்டம் குருவித்துறையில் உள்ள ஸ்ரீவல்லவரங்கப்பெருமாள் சன்னதிக்கு அருகில் மரமுகள் வைத்து உழக்கூடாது, உரலில் இடிக்கும் சத்தமும் கேட்கக்கூடாது. இது வைகைக் கரையில் உள்ள தலம்.

25) காஞ்சீபுரத்தில் சக்தியானவள மணல் லிங்கம் செய்து வழிபட்டு வந்த சமயம், வேதவதி என்ற நதி வெள்ளம் கண்டது. அப போது சிவனை - சக்தி தழுவிக்கொண்டாள். தழுவியதடம் இன்றும் லிங்கத்தில் உள்ளது.

தக்கோலம் என்ற தலத்தில் (அரக்கோணம் அருகில் உள்ளது) பார்வதி மணல் லிங்கம் பிடித்து வழிபட்ட போது வேதவதியில் வெள்ளம் பெருக்கெடுத்தது. அப்போது லிங்கத்தை - பார்வதி தனது மார்போடு தழுவிக்கொண்டாள் - கட்டிக்கொண்டதடம் இன்றும் லிங்கத்தில் உள்ளது.

★★★★★★★★★★★★★★★★★★★★

## அரியும் சிவனும் ஒன்று

வடாற்காடு மாவட்டத்தில் உள்ள சிற்றூர் திருப்பாற்கடல் ஆகும். இங்குள்ள கோவிலில் ஆவுடையார் மீது லிங்கத்திற்குப் பதிலாக, பெருமாள் நின்ற நிலை காட்சி கிடைக்கிறது. இந்த வினோத வடிவில் இருந்து அரியும் சிவனும் அன்பர்களுக்கு அருள் பாலித்து சமய ஒற்றுமைக்கு வழிகாட்டிவருகின்றனர்.

தொகுப்பு: வி. சக்திவேல்
தென்புத்தூர்.

## வணங்கும் முறை

1. மும்மூர்த்திகளை வணங்கும் முறை.
தலைக்குமேல் ஒரு அடிகையை உயர்த்தி கூப்பி வணங்க வேண்டும்.

2. ஆசிரியர்களை வணங்கும் முறை.
நெற்றிக்கு நேராக வணங்கவேண்டும்.

3. தந்தை, அரசரை வணங்கும் முறை.
உதடுகளுக்கு நேராக வணங்கவேண்டும்.

4. சான்றோரை வணங்கும் முறை.
மார்புக்கு சற்று மேலாக வணங்கவேண்டும்.

5. அன்னையை வணங்கும் முறை.
வயிற்றுக்கு நேராக கைகூப்பி வணங்கவேண்டும்.

தொகுப்பு வி. சக்திவேல் - தென்புத்தூர்.



# மதிப்புரை

## சங்கடங்களை அகற்றி மனச்சாந்தியளிக்கும் மந்திரங்கள்

ஆசிரியர்: கே.எஸ். பதஞ்சலி ஐயர் - பதிப்பு: நர்மதா பதிப்பகம்
1993; விலை: 14 ரூபாய், பக்கம்: 100

"சிந்தனைக்கு எட்டாத காலந்தொட்டு இன்றுவரை தெய்வங்களை வழிபடுவதற்கு மந்திரங்கள்தான் முறையான - சரியான சாதனம்" என்பது ஆசிரியரின் தெளிவானக் கூற்று; ஏற்புடைய கூற்று.

"தெய்வ நிந்தனையும், சீர்திருத்தப் பேச்சுகளும் பகுத்தறிவுப் பிரச்சாரங்களும் வெகுவாகப் பெருகிவிட்ட இந்நாட்களில் மந்திரங்களுக்கு உள்ள மகிமையும், மதிப்பும் சற்றும் குறைந்ததாகத் தெரியவில்லை" என்ற ஆசிரியரின் கூற்று ஆய்விற்குரியது.

அரிது அரிது இப்பூவுலகில் மானிடப் பிறவி. இம் மானிடப் பிறவியில் பலர்படும் அல்லல்கள் எண்ணிலடங்கா. இத்தகைய இன்னல்கள் நீங்கிட படைப்பின் வாயிலாக வழிவகுத்தவர் திரு. கே.எஸ். பதஞ்சலி அவர்களையே சாரும்.

அன்னாரின் "சங்கடங்கள் அகற்றி மனச்சாந்தியளிக்கும் மந்திரங்கள்" என்ற நூலானது நம்பிக்கை அடிப்படையில் மன ஒருமைப்பாட்டுக்கும், பலவித நோய்கள், தோஷங்கள், சங்கடங்கள் மூலமாக ஏற்படும் வெறுப்புக்களை நீக்கவும் வசிய மந்திரம், கந்தசஷ்டி கவசம், மனோசக்தி வளர்ப்பு முதலான பல்வேறு நன்மைகளைப் பெறவும் இந்த நூல் வழிவகுக்கின்றது. தியானத்தின் அடிப்படையில் இறைவன் திருவுருவத்தை மனதில் விடாது நிலைநிறுத்தி, அலைபாயும் மனதை அடக்கமுயற்சி செய்ய வேண்டும் என்பதை இந்நூலாசிரியர் இக்கால மக்களுக்கு வலியுறுத்துகிறார்.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிலைகளிலும் ஏற்படும் மோசமான, சிக்கலான சூழ்நிலைகளையும் இறைவனது மந்திரங்களைக் கொண்டு வெற்றி பெறமுடியும் என்பதை 27 நட்சத்திரங்களில் பிறக்கும் மாந்தர்களுக்கு எடுத்துரைக்கின்றார் இந்நூலாசிரியர்.

எதிர்பாராத வகையில் ஏற்படும் இன்னல்கள், தேள்கொட்டுதல், பாம்பு கடித்தல், எலி கடித்தல் போன்றவற்றால் நேரிடும் ஆபத்துக்களைக் களைய, வசிய மந்திரம் படைத்துள்ளமை போற்றுதற்குரியது. ஐயர் அவர்களின் ஆழ்ந்த அறிவும், பரந்த எண்ணமும், கலக்கமில்லா ஆர்வமும் இந்நூலுக்கு அணிசெய்கின்றன. பொதுமக்களுக்கு இந்நூல் ஓர் அரிய விருந்தாகும். இது எல்லோராலும் அவசியம் வாங்கி தம் இன்னல்களைப் போக்க நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டிய நூல்.

### ஆழ்வார்கள் அருளிச்செயலில், திவ்ய தேச எண்ணிக்கையில் மங்களாசாசனம் பெற்ற தலங்களில்:

| | |
|---|---|
| 1) 200 பாசுரங்களுக்குமேல் பெற்ற தலங்கள் (திருவரங்கம், திருவேங்கடம்) | 2 |
| 2) நூற்றுக்குமேல் இருநூறுக்குள் பாசுரங்கள் பெற்றதலங்கள் (திருகண்ணபுரம், திருநறையூர், திருமாலிருஞ்சோலை) | 3 |
| 3) பத்திற்குமேல் நூற்றுக்குள் பாடல்பெற்ற தலங்கள் | 49 |
| 4) பத்து பாசுரங்கள் பெற்ற தலங்கள் | 24 |
| 5) இரண்டிலிருந்து ஒன்பது பாசுரங்கள் பெற்ற தலங்கள் | 15 |
| 6) ஒரே பாசுரம் பெற்று திவ்ய தேச எண்ணிக்கையில் சேர்ந்துள்ளவை | 15 |
| ஆக மொத்தம் | - 108 |

### நூற்றியெட்டு திவ்யதேச மங்களாசாஸனம் பெற்ற தலங்களில்

| | |
|---|---|
| சோழநாட்டுத் தலங்கள் | - 40 |
| பாண்டியநாட்டுத் தலங்கள் | - 18 |
| மலைநாட்டுத் தலங்கள் | - 13 |
| நடுநாட்டுத் தலங்கள் | - 02 |
| தொண்டைநாட்டுத் தலங்கள் | - 22 |
| வடநாட்டுத் தலங்கள் | - 12 |
| திருநாடு | - 01 |
| ஆக மொத்தம் | - 108 |

Published on behalf of T.T.Devasthanams by N.S.Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D.Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., T.T.D.Press, Tirupati - 517 507.

